# மேதைகள் வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள்

கவிஞர் தே. ப. பெருமாள்



வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

முதற்பதிப்பு: செப்டம்பர், 1970
இரண்டாம் பதிப்பு: ஜனவரி, 1975
மூன்றாம் பதிப்பு: மார்ச், 1978
நான்காம் பதிப்பு: மே, 1983



திருநாவுக்கரசு தயாரிப்பு

விலை ரூ. 3-50

அச்சிட்டோர்:

ஸ்ரீ பரமேஸ்வரி பிரஸ்
49, காரணீஸ்வரர் கோவில் தெரு
மயிலாப்பூர், சென்னை—4

# உள்ளுரை

## 1. அன்னையின் ஆணையைக் காத்தவர்

அண்ணல் காந்தியடிகள் தம் உயர்நிலைப் படிப்பை முடித்ததும் கல்லூரியில் சேர்ந்தார். கல்லூரிப் படிப்பு இவருக்குக் கடினமாகவே இருந்தது. மேல்நாடு சென்று படிக்க வேண்டும் என்ற ஆர்வம் இவருக்கு. இவர்கள் குடும்பத்துக்கு மிகவும் வேண்டிய ஷோஷிஜி என்பவரும் காந்தியின் அன்னையாரிடம், அவர் மேல்நாடு சென்று பாரிஸ்டர் படிப்பு படிப்பதே நலமெனக் கூறினர்.

காந்தியின் அன்னையாரோ இதற்கு முதலில் இசைந்து விடவில்லை. இங்கிலாந்து சென்றவர்களுக்கு மது, மாமிசம் உண்ணும் பழக்கம் தவிர்க்க முடியாது ஏற்பட்டுவிடும் என்ற செய்தியை அவர் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்ததே இதற்குக் காரணம்.

பின்னர் இவ்வம்மையார் துறவியான பேச்சர்ஜி அடிகளிடம் இதுபற்றி ஆலோசித்தார். அவர், காந்தி இங்கிலாந்து சென்று படித்தல் பயனுடையதென்றும், ஆனல் சில கட்டுப்பாடுகளுக்குக் காந்தி உட்பட்டு நடக்க வேண்டுமென்றும் கூறித் தமது கருத்தை விளக்கினர்.

அடிகளின் ஆலோசனைப்படி காந்தியிடமிருந்து அவரது அன்னையார் சில வாக்குறுதிகளைப் பெற்றுக்கொண்டார்.

அவற்றுள், மேல்நாடு சென்றாலும் மாமிசம் உண்ணக் கூடாது, மதுவருந்தக் கூடாது என்பன முக்கியமானவை.

காந்தி பம்பாய்வழி இங்கிலாந்துக்குக் கப்பலில் புறப் பட்டார். நண்பர்கள் வந்து வழியனுப்பி வைத்தார்கள். மஜூம்தார் என்ற வழக்கறிஞர் இவருக்குப் பிரயாணத் தோழராகக் கிடைத்தது நல்ல வாய்ப்பாக ஆயிற்று.

காந்தி ஏற்கனவே மிகவும் கூச்சம் கொண்டவர். கப்பல் சாப்பாட்டு அறையில் சென்று இவர் சாப்பிடுவதே இல்லை. தமக்குத் தரும் உணவுகளில் புலால் கலந்திருக்குமோ என்ற அச்சம் இவருக்கு. எனவே இவர் தாம் வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த பழங்களையும் பிற திண்பண்டங் களையுமே பிரயாண நாட்களில் உணவாக உட்கொண்டு வந்தார்.

காந்தியின் இந்நடத்தையைக் கண்டு இவரோடு பிரயாணம் செய்தவர்கள் வியப்பும் நகைப்பும் கொண் டனர். அவர்களில் ஆங்கில நண்பர் ஒருவர் இது குறித்து வினவியபோது, காந்தி தமது அன்னைக்குக் கொடுத்த உறுதிமொழிகளை அவரிடம் அறிவித்தார்.

ஆங்கில நண்பர் இது கேட்டு நகைத்தவராய், "இங்கிலாந்து போன்ற குளிர்மிக்க நாடுகளில் மாமிசமும் மதுவும் உண்ணாமல் யாருமே வாழ முடியாது. உம் தீர்மானம் அங்கு சென்றதுமே காற்றாய்ப் பறந்துவிடும்" எனக் கூறினார்.

அவரிடம் காந்தி, "இங்கிலாந்தில் மதுவும் மாமிசமும் உண்ணாமல் வாழ முடியுமானால் வாழ்வேன். இல்லா விட்டால் எனது கல்வி கற்கும் நோக்கத்தையே ஒழித்து விட்டு இந்தியா திரும்பி விடுவேன்" என்று உறுதியாகக் கூறினார்.

இங்கிலாந்து சென்ற பிறகும் காந்திக்கு எத்தனையோ சோதனைகள் ஏற்பட்டன. நண்பர்கள் அவரிடம் "மது பானம் அருந்தாவிட்டாலும் மாமிச உணவையாவது சாப்பிட்டுக்கொள்ள வேண்டும்" என வலியுறுத்தினர். அவர்கள் இவரிடம், "இங்கிலாந்து குளிரான நாடு; இங்குப் புலாலுணவை ஏற்றுக் கொள்ளாவிட்டால் உடல் நலம் கெட்டுவிடும்" எனத் தெரிவித்தனர். காந்தியின்பால் அவர்கள் கொண்டுள்ள அன்பின் காரணமாகவே இவ்வாறு கூற நேர்ந்தது.

இவ்வுரைகளைக் கூறிய நண்பர்களுக்குக் காந்தி நன்றி தெரிவித்துக் கொண்டார். என்ன நேரினும் தம் அன்னை யாருக்கும் தாம் அளித்துள்ள வாக்குறுதிகளை மீறப் போவதில்லை என அழுத்தமாக அவர் தம்முள் தீர்மானித்துக் கொண்டார்.

எத்தனையோ துன்பங்களும் தொல்லைகளும் ஏற்பட்ட பிறகுங்கூட காந்தி, தம் மனச்சான்றுக்கு எதிராக நடந்து கொண்டதில்லை. மூன்றாண்டுகள் இவ்வாறு நாட்களைக் கழித்து, கருத்தாகக் கற்று வழக்கறிஞர் தேர்விலும் வெற்றி பெற்று காந்தி தம் தாய்நாடு திரும்பினர்.

தம் இல்லம் அடைந்ததும் அன்னையாரை வணங்கி, அவரிடம் தாம் கொடுத்துள்ள வாக்குறுதிகளைக் காப் பாற்றிய வெற்றியைக் கூறவேண்டுமென எண்ணினர். அதில் தமக்கு ஏற்பட்ட தொல்லைகளையெல்லாம் தெரிவித்து அவர் தம் வாழ்த்தைப் பெறவேண்டும்; அன்புரைகளைக் கேட்டுக் குளிரவேண்டும் என்றெல்லாம் காந்தியின் நெஞ்சத்தில் எண்ணங்கள் அலையடித்துக் கொண்டிருந்தன.

ஆனல்......? பம்பாய் வந்திறங்கிய போதுதான் அந்தச் செய்தியை அவர் அறிந்தார். தம்மைப் பெற்று வளர்த்த அன்னை, அன்பையெல்லாம் அள்ளிக் கொட்டிச் சீராட்டிப் பாராட்டித் தம்மைப் பேணிய தாய், இம்மண்ணுலகை

விட்டு மறைந்து விட்டார் என்பதை தமது தமையனார் வழி அறிந்தார். அதிர்ச்சியடைந்தார்; அன்னையை எண்ணி யெண்ணி உருகினார்; உள்ளம் நெகிழ்ந்து கரைந்தார். தமக்கு நல்லிசைவு தந்தனுப்பிய தாயை மீண்டும் கண்டு தாம் பெற்ற வெற்றியைக் கூற வாய்ப்பில்லையே என்ற வேதனை அவரை மிகவும் தளர வைத்தது.

அன்னைக்குத் தாம் கொடுத்த வாக்குறுதிகளை தம் வாழ்நாள் முழுவதும் காப்பாற்றும் உறுதியை அன்றி லிருந்து அவர் மேற்கொண்டார்.

## 2. அவசரத் தந்தியும் அமைதியும்

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை திருவனந்தபுரம் மகளிர் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றி வந்த காலம். இவர் தங்கியிருந்த வீட்டைத் தொட்டு இவரது நண்பர் ஒருவரும் தங்கியிருந்தார்.

நண்பர் வீட்டில் 'மருவீடு' விருந்தொன்று நடக்க இருந்தது. அவரது வீடு இதற்கு இடம் போதாமையால் கவிமணியின் வீடும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டது.

குறிப்பிட்ட நேரத்தில் புதுமணத் தம்பதிகள் விருந்துக்கு வந்தார்கள். இவர்களுடன் உறவினர்களும் நண்பர்களும் வந்து குழுமலாயினர். வந்த இவ்விருந்தினர் கள் நண்பர் வீட்டிலும் கவிமணியின் இல்லத்திலும் நிறைந் திருந்தனர். இரு வீடுகளிலும் கலகலப்பும், மகிழ்ச்சி ஆரவாரமும் நிரமபியிருந்தன.

இந்நேரம் கவிமணிக்கு ஒரு அவசரத் தந்தி வந்தது. தந்தியை வாங்கிய கவிமணியின் உள்ளம் திடுக்கிட்டது. அவர் நினைப்பதுபோல் தந்தியினுள் செய்தி இருந்தால்? அதை அவரால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. எனினும்

அந்நேரம் அமைதியை வரவழைத்துக் கொண்டார். தந்தியை ஒருவரும் அறியாது கொண்டு போய்ப் பெட்டியினுள் வைத்துப் பூட்டினார்.

மருவீட்டுக்கு வந்திருந்தவர்கள் அனைவரும் விருந்து சாப்பிட்டுவிட்டு விடைபெற்றுச் சென்றார்கள். தம்பதிகளும் விடைபெற்றுப் போயினர். கவிமணியின் இல்லத்தில் இப்போது அமைதி குடி கொண்டிருந்தது.

பெட்டியினுள் பூட்டி வைத்திருந்த தந்தியை எடுத்துப் பிரித்துப் பார்த்தார். ஆம், அவர் நினைத்தது போலவே தந்தியில் செய்தி இருந்தது. அவரது நெருங்கிய உறவினர் ஒருவரின் சாவுச் செய்தியைத் தாங்கி வந்த தந்திதான் அது கவிமணியின் உள்ளம் சோகத்தில் நிறைந்தது. உடனேயே அவரும் அவரது மனைவியாரும் துக்கத்தில் கலந்து கொள்ள நாகர்கோவிலுக்குப் புறப்பட்டனர்.

விருந்தினர்கள் திரண்டிருந்த நேரத்தில் தந்தியைப் பிரித்துக் கவிமணி படித்திருந்தால் அதை அனைவரும் அறிந்து கொள்வார்களல்லவா! மகிழ்ச்சி பரவியிருக்கும் அந்த இடத்தில் துக்கத்தின் சாயல் பரவாதா? புதுமண மக்களுக்காக நடந்த அந்த மகிழ்ச்சி விருந்து வைபவத்தில் கவிமணி துயரச் செய்தியை வெளியிட விரும்பவில்லை. எனவேதான் அமைதியை மனத்தில் வரவழைத்து, யாருக்கும் தெரியாமல் தந்தியைக் கொண்டுபோய்ப் பெட்டியினுள் அடக்கமாக வைத்திருந்தார்.

## 3. அன்பே வெல்லும்

அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் நான்கு ஆண்டுக் காலம் கடுமையாக நடந்து கொண்டிருந்தது. இது முடிந்ததும், இப்போருக்குக் காரணமாக இருந்தவர்களைத்

தூக்கிலிட வேண்டுமென, அங்குள்ள முக்கியமானவர்கள் ஜனதிபதி லிங்கனிடம் வற்புறுத்திக் கூறினர்கள்.

இதற்குப் பதிலாக லிங்கன், ''தீர்ப்புக் கூறும் பொறுப்பு நமக்கல்ல. அது இறைவனுக்கே. மேலும் பழிக்குப் பதிலாக பழிவாங்குதல் நலம் தரும் செயலல்ல. குற்றவாளிகளிடமும் அன்பையே காட்டுதல் வேண்டும். அதுவே அவர்களை நம்முடன் இணைப்பாக்கும். எனவே அவர்களைத் தூக்கிலிடவோ, கொலை செய்யவோ என்னல் நடக்குமென யாரும் எதிர் பார்க்கவேண்டாம்'' என உறுதியாகவும் அழுத்தமாகவும் தெரிவித்துவிட்டார்.

உள்நாட்டில் போர் எழக் காரணமாக இருந்தவர்களை ஜனதிபதி லிங்கன் பழிவாங்க மறுத்துவிட்டார் என்ற இச் செய்தியைக் கேட்ட மக்கள் வியப்பெய்தினர். மாந்தருக்குள் இவர் ஒரு தெய்வமான அவரை மனமார வாழ்த்திக் கொண்டனர்.

## 4. ஆசிரியருக்கு அன்பளிப்பு

மாவீரன் அலெக்ஸாண்டரின் சின்னஞ்சிறு பருவம். அவன் லியோனிடாஸ் என்பவனிடம் கல்வி பயின்று வந்தான்.

ஒருநாள் பிரார்த்தனையின்போது அலெக்ஸாண்டர் சாம்பிராணிப் பொடியை அள்ளியள்ளித் தீயிலிட்டுப் புகைத்துக் கொண்டிருந்தான். எங்கும் ஒரே நறுமணப் புகையின் சூழல். ஒருவர் முகத்தை மற்றவர் பார்க்க முடியாத அளவுக்குப் புகை மண்டியிருந்தது.

ஆசிரியர் லியோனிடாஸ் அவனைப் பார்த்து, ''அலெக்ஸாண்டர், சாம்பிராணி இப்போது நம்மிடம் குறைவாகவே உள்ளது. மட்டாகவே இதைச் செலவு செய்யவேண்டும்.

இத்தகைய பொருள்கள் மிகுந்த நாடுகளை நீ கைப்பற்றும் போது இவ்வாறு வனம்போல் புகைத்துக் கொள்ளலாம்" என்றுரைத்தார்.

பிற்காலம் அலெக்ஸாண்டர் சிரியா நாட்டைக் கைப் பற்றினன். இதில் ஆக்கிரமிப்புப் பொருள்கள் நிறைய வந்தன. இவற்றுடன் சாம்பிராணியும் குங்கிலியமும் சேர்ந்திருந்தன.

இவற்றைக் கண்ட அலெக்ஸாண்டருக்குத் தன் ஆசிரியர் லியோனிடாஸின் நினைவு வந்தது. சின்னஞ்சிறு பருவத்திய அந் நிகழ்ச்சி அவன் அகக் கண்களில் துலக்கமிட்டது. அவர் சொன்ன மொழிகள் அவன் செவிகளில் ஒலித்தன.

அலெக்ஸாண்டர் தன் ஆசிரியருக்குச் சாம்பிராணியும் குங்கிலியமும் ஏராளமாக அனுப்பி வைத்தான். அத்துடன் ஒரு கடிதமும் அனுப்பியிருந்தான். அதில் அவன், "ஆசிரியர் அவர்களுக்கு, தங்களுக்குச் சாம்பிராணியும் குங்கிலியமும் பெரும் அளவுக்கு அனுப்பியுள்ளேன். இனி தாங்கள் ஆண்டவனிடம் சிக்கனம் காட்டவேண்டா மல்லவா!" என்று குறிப்பிட்டிருந்தான்.

## 5. புத்தகப் பிரியன்

அந்தச் சிறுவன் கல்வி கற்றுக் கொள்ளப் பேராசை கொண்டிருந்தான். ஆனல் அவனுக்கு அதற்குள்ள வாய்ப்புத்தான் இல்லை. அவன் ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்தவன். அவன் தந்தையோ பிறரின் வயலை உழுது, அதில் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு குடும்பத்தை மிகவும் சிரமமோடு நடத்தி வருகிருர்.

தனது மகனின் கல்வியார்வத்தைக் கண்டு அவனது தாயே அவனுக்குக் கற்பித்து வந்தாள். அத்துடன்

மகான்கள், வீரர்கள், தியாகிகள், அறிஞர்கள் ஆகியோர் வாழ்க்கை வரலாறுகளையும் அவனுக்குக் கதைபோல் சொல்லிக் கொடுத்தாள். இத்தகைய வரலாறுகளைக் கேட்டு அச் சிறுவன் மெய்சிலிர்த்துப் போவான். தானும் அவர்களைப் போல் ஆகவேண்டுமென அவன் மனத்தில் ஆர்வம் பொங்கியெழும்.

சிறுவன் சற்றுப் பிராயம் ஆகவே அவன் தந்தை அவனையும் வேலைக்கு அழைத்துச் சென்றார். குடும்பம் அந்த அளவுக்கு வறுமையால் தத்தளித்துக் கொண்டிருந்தது.

ஒருநாள் சிறுவன் உழுதுகொண்டிருந்த வயலின் பக்கத்து வயல் உரிமைக்காரர், ஒரு புத்தகத்தை வைத்துப் படித்துக்கொண்டிருப்பதை அவன் பார்த்தான். தனக்கும் அப்புத்தகத்தைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் அவனிடம் எழுந்தது. அமெரிக்க மக்களுக்குச் சுதந்திரம் தேடிக் கொடுத்த ஜார்ஜ் வாஷிங்டனின் வாழ்க்கை வரலாறே அந்நூல்.

சிறுவன் அந்நிலத்தின் சொந்தக்காரரிடம் அப் புத்தகத்தை இரண்டு நாட்கள் தனக்கு இரவல் கொடுக்க வேண்டுமென்றும், தான் அதைப் படித்துவிட்டுப் பாதுகாப்பாகத் திரும்ப அவரிடம் ஒப்புவித்து விடுவதாகவும் கூறினன்.

சிறுவனின் படிப்பார்வத்தைக் கண்டு அந்நிலப் பிரபுவின் உள்ளம் வியப்பும் மகிழ்ச்சியும் கொண்டது. அத்துறையில் அவனை ஊக்குவிக்கும் எண்ணத்தோடு உடனேயே அப்புத்தகத்தை அவர் அவன் கையில் கொடுத்தார்.

புத்தகத்தைப் பெற்ற சிறுவனுக்குப் பெரும் நிதி கிடைத்தது போலாயிற்று. நேராக வீட்டுக்குச் சென்று, புத்தகத்தை விரித்துப் படிக்கத் தொடங்கினன். ஜார்ஜ்

வாஷிங்டனின் மன உறுதியும் அவரது வீரச் செயல்களும் அமெரிக்க மக்களுக்காக அவர் பட்ட துன்பங்களும் அவனை மெய்மறக்க வைத்தன.

அவன் எவ்வளவு நேரம் அப்படிப் படித்துக் கொண்டிருந்திருப்பானோ தெரியாது. வயலில் வேலை செய்ய அவனது தந்தை அவனை அழைத்தபோதுதான் அவன் தன் நினைவுக்கு வந்தான். அப்புத்தகத்தைத் தன் வீட்டுக் கூரையில் செருகி வைத்துவிட்டுத் தந்தையோடு வயல் வேலைக்குப் போய்விட்டான்.

வயலில் அவர்கள் வேலை செய்துகொண்டிருக்கும்போது பெருமழை பெய்யத் தொடங்கும்போது, சிறுவனுக்குத் தான் கூரையில் செருகி வைத்திருந்த புத்தகத்தின் நினைவு வந்தது. சிதிலமடைந்த கூரையில் வைத்த புத்தகம் என்ன ஆனதோ, எப்படி ஆனதோ என திகில் கொண்டான். ஓடோடி வீட்டுக்கு வந்தான். கூரையில் வைத்திருந்த அப்புத்தகத்தை எடுத்துப் பார்த்தான் அது முழுமையும் நனைந்து போயிருந்தது.

புத்தகத்தை எடுத்துக்கொண்டு சிறுவன் நேராக அதன் சொந்தக்காரராகிய நிலப்பிரபுவிடம் வந்தான். அவரிடம் அந்தப் புத்தகத்தை எவ்வாறு காட்டுவது, என்ன சொல்வது, என்பவை தெரியாமல் அச்சிறுவன் தத்தளித்தான். கூச்சவுணர்ச்சி அவனைப் பிடுங்கித் தின்றது. வேதனையால் அவனது உள்ளம் நொந்து போயிற்று. கண்களில் நீர் கட்டியது. அவன் அப்பிரபுவிடம், "ஐயா, தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும். நான் தங்களது புத்தகத்தைப் பாதுகாப்பாகவே வைத்திருந்தேன். எதிர்பாராது பெய்த மழையால், எங்கள் வீட்டில் ஏற்பட்ட ஒழுக்கு. புத்தகத்தை இந்த விதம் ஆக்கிவிட்டது!" என்று அழுதவாறு கூறினான்.

இதைக் கேட்ட அந்நிலப்பிரபுவின் உள்ளம் இரங்கியது. சிறுவனின் நேர்மையுணர்ச்சி அவரைப் பெரிதும் கவர்ந்தது.

அவர் சிறுவனைப் பார்த்து, "புத்தகம் நனைந்து போனதற்காக நீ கவலை கொள்ளவேண்டாம் உன்னை அறியாது நேர்ந்த பிழைக்கு நீ என்ன செய்வாய்? என் வயலில் மூன்று நாட்கள் நீ வேலை செய். அதற்கு ஊதியமாக இப்புத்தகத்தை நீயே எடுத்துக்கொள்" என்று கூறினர்.

இதைக் கேட்ட அச்சிறுவனின் மகிழ்ச்சிக்கு ஒரு எல்லையும் உண்டோ? அவர் விரும்பிய வண்ணமே அவன் மூன்று நாட்கள் அவரது வயலில் வேலை செய்து. அதற்கு ஊதியமாக அப்புத்தகத்தைப் பெற்றுக்கொண்டான்.

இச்சிறுவன் யார் தெரியுமா? அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஜனதிபதியாக விளங்கி, அடிமைகளுக்கு விடுதலை வாழ்வு வழங்கிய அன்புப் பெருந்தகை ஆபிரகாம் லிங்கனே ஆவர். அவருடைய சின்னஞ்சிறு வயதில் நடந்த ஒரு நிகழ்ச்சிதான் இது.

## 6. புதல்வி தூண்டிய புத்துணர்வு

அசோகனது பேரரசு வடஇந்தியா முழுவதும் பரவியிருந்தது. தென்பகுதியில் சென்னை, மங்களூர்வரையிலும் அவனது ஆட்சி விரிவு கண்டிருந்தது. ஆனல் கலிங்க நாடு மட்டும் இரான் ஆட்சிக்குட்பட்டது தன்னரசாய் நடந்து கொண்டிருந்ததை இவனல் தாங்கிக்கொள்ள இயலவில்லை. இதையும் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டுவர அவன் முடிவு செய்தான். எனவே கலிங்கத்தின்மீது படையெடுத்தான்.

கலிங்க அரசன் அஞ்சாநெஞ்சமும் பிறருக்குக் கீழ்ப்படியாப் பெருமிதமும் பெற்றவன். தன் நாட்டின்மீது போர் தொடுத்த அசோகன் படைகளை அவன் வலுவுடன் எதிர்த்தான். இக் கடும் போரின் முடிவில் கலிங்கம் தோல்வி கண்டது.

இப்போரில் மடிந்தோர் இலட்சக்கணக்கானவர் ஆவர். கையிழந்தும் காலிழந்தும் பிற உறுப்புக்கள் இழந்தும் துயரம் அனுபவித்தோர் இலட்சம் இலட்சம் ஆவர். இனிச் சிறைப்பட்டோர் தொகையோ கணக்கிலடங்கா. இப் போரில் கிடைத்த பொன்னும் பொருளும் குவியல் குவியல் களாகும்.

வெற்றி கண்ட மன்னன் அசோகன் போரில் கிடைத்த உயர்ந்த நகைகளையும் பிற பொருள்களையும் தன் அருமைப் புதல்வி சங்கமித்திரைக்குப் பரிசளிக்க விரும்பினுன். அவற்ருேடு அவன் சங்கமித்திரை இருக்கும் இடம் நோக்கிச் சென்ருன்.

இப்பொருள்களை அசோகன் தன் மகளுக்கு வழங்க முனைந்தபோது அவள் ஏற்க மறுத்துவிட்டாள். இவ்வளவு அரிய பொருட்களைத் தன் புதல்வி வேண்டாம் என மறுத் ததின் காரணத்தை அறியமாட்டாத அரசன் வியப்போடு அவளைப் பார்த்துக்கொண்டு நின்ருன். சங்கமித்திரை சொல்வாள்.

“தந்தையே, நாங்கள் கலிங்கத்தில் பெரும் வெற்றி கண்டது உண்மைதான். ஆனுல் இதில் மாண்டுபோன இலட்சக்கணக்கான மக்களைப்பற்றித் தாங்கள் சிந்தித்த துண்டா? உறுப்புக்கள் இழந்து குற்றுயிரும் கொலையுயிரு மாக வாடித் தவிப்போர்களின் பரிதாப நிலைமை நீங்கள் பார்த்ததுண்டா? கணவனை இழந்து கைம்பெண்ணுன பல்லாயிரக்கணக்கான அபலைகள் பெருக்கிவரும் கண்ணீர் ஆற்றை நீங்கள் காணவில்லையா? அருமை மைந்தரை இழந்து, வாழ எவ்வித வகையுமற்று, வாடித் தவிக்கும் இலட்சக்கணக்கான முதியவர்களின் துயரக் கோலம் தங்கள் நெஞ்சத்தை இளக்கவில்லையா?

கொலையிலும் அழிவிலும் பெற்ற இந்தப் பொருள்கள் எனக்கு வேண்டாம். இவைகளை அவலத்தில் மூழ்கி, வாழ

வகை கெட்டு வாடித் தவிக்கும் கலிங்க நாட்டு மக்களுக்கே கொடுத்துவிடுங்கள்" என்று கூறிய சங்கமித்திரை தனது தந்தையின் பக்கம் நிற்கவே விரும்பாது மெல்ல அவ்விடத்தை விட்டுச் சென்று கொண்டிருந்தாள்.

புதல்வியின் மொழிகள் மாமன்னன் அசோகனின் அகக் கண்களைத் திறந்தன. அவன் நெஞ்சத்தை நெகிழ வைத்தன. 'அவள் கூறியவை எவ்வளவு மெய்மையான மொழிகள்! நான் எத்துணை வெறி கொண்டவனாக நடந்து விட்டேன்! பல்லாயிரக்கணக்கான குடும்பங்களின் மகிழ்ச்சி யையும் அமைதியான வாழ்வையும் நிலை குலைத்துப் பாழாக்கி விட்டேனே!" என்று அவன் தான் செய்த கொடூரச் செயலை நினைத்து நெஞ்சம் ஆற்றாமை கொண்டான்.

அசோகன் இக்கொடுஞ் செயலுக்கு ஆறுதல் பெற விரும்பினான். அவனிடம் புத்துணர்வு பிறந்தது. அவன் அகவிழிகளில் போதி மாதவன் புத்தர்பிரான் அருள் முகம் துலங்கலாயிற்று. அவரது அறநெறி அவன் முன்னே விரிந்து தென்பட்டது.

அன்றிலிருந்து அசோகன் தான் இனிப் போரே செய்வ தில்லையென உறுதி பூண்டான். இனி இவ்வுலகை அன்பினால் வெல்வேன் என்னும் முடிவுக்கு வந்தான். இதன் பின்னர் அவன் வாழ்வில் ஏற்பட்ட பெரும் மாறுதல்களை வரலாறு அறிவிக்கும்.

## 7. உறக்கமும் உணர்வும்

சதாவதானி சேகுதம்பிப் பாவலர் நிறைந்த பெரும் தமிழ்ப் புலவராக விளங்கியவர். நினைவாற்றலில் ஈடு இணையற்றுத் திகழ்ந்தவர். நூறு அவதானங்கள் செய்து புலவர்கள் அறிஞர்கள் மத்தியில் நினைவாற்றல் வல்லமை

யைப் பலமுறை மெய்ப்பித்துள்ளார். இவரது பல நூற்கள் சொல்நயம், பொருள் சிறப்பு, கற்பனை எழில் மிகுந்து அறிஞர்கள் பாராட்டும் தகுதியில் உள்ளன. வள்ளலார் அருட்பாவை 'மருட்பா' என்று பிரச்சாரம் பண்ணிய புலவர் குழுவை வென்று, அவை 'அருட்பாக்களே' என மெய்ப்பித்த பெருமையும் பாவலருக்குண்டு.

இப்பெரும் புலவரிடம் ஒருநாள் தமது கவிதை நூலொன்றைக் காட்டி மதிப்புரை பெற வந்திருந்தார் தமிழறிஞர் ஒருவர். அறிஞரை வரவேற்று அவர் வந்த காரணத்தையும் அறிந்து கொண்டார் பாவலர்.

அறிஞர்களிடம் கவிதைகளைப் படிக்கக் கேட்டுக் கொண் டார் பாவலர். அறிஞரும் வரிசையாகக் கவிதைகளைப் படித்துக்கொண்டு வந்தார். அது நல்ல வெயில் நேரம். இவர்கள் இருந்த இடத்தில் காற்றும் இதமாக வீசிக்கொண் டிருந்தது. பாவலரது கண்கள் மயங்க, உறக்கமும் வந்து விட்டது.

தமது கவிதைகளைப் படித்துக்கொண்டு வந்த தமிழறிஞர் பாவலரின் துயில் நிலையைப் பார்த்து மனதில் சலிப்பு கொண்டார். கவிதைகள் முழுமையும் படித்துக் கேட்பித்துப் பாவலர் சொல்லும் திருத்தங்களையும் செய்ய எண்ணியிருந் தார் தமிழறிஞர். இப்போது அதற்கு வழியில்லாது போயிற் றல்லவா!

தூங்குகின்ற அந்தப் பெரும் புலவரை எழுப்பலாமா? அது பண்பாட்டுக்கழகல்லவே! வேறு வழியின்றித் தமிழறிஞர் தம் போக்கில் கவிதைகள் முழுமையும் படித்துத் தீர்த்தார். இதன் பின்னர், "ஐயா, ஐயா" எனப் பாவலரை எழுப் பினார்.

கண் விழித்த பாவலர், "நூல் முழுவதையும் படித்து முடித்துவிட்டீர்களா!" என வினவினார்.

"ஆம்", என்றார் தமிழறிஞர்.

நூலின் தொடக்கத்திலிருந்து முடிவு வரையிலும் இடை யிடையேயுள்ள பல பாடல்களின் அடிகளைச் சொல்லி அவற்றில் இன்ன இன்ன பதங்களை மாற்றி. இன்ன இன்ன பதங்களை அமைத்தால் நன்றாக இருக்குமென்று தமது கருத் துக்களைக் கூறினார் பாவலர்.

இத்திருத்தங்களைக் கேட்ட தமிழறிஞருக்குத் தூக்கி வாரிப் போட்டது போலாயிற்று. அவர் மெய் சிலிர்த்துப் போனார். தமக்கே அப்பாடல்களை நினைவுபடுத்திச் சொல்ல இயலாதிருக்கும்போது தூக்க நிலையிலிருந்தே பாவலர் இவ்வளவு தெளிவாகச் சொல்கிறாரே என்ற வியப்பு அவருக்கு.

அறிஞர் பாவலரின் திருத்தங்களை அப்படியே ஏற்றுக் கொண்டார். பாவலரிடமிருந்து அந்நூலுக்கு வாழ்த்துப் பாடலையும் பெற்றுக்கொண்டார்.

கண்கள் மயங்கிய போதிலும் செவியுணர்வு மயங்காத பாவலரின் பேராற்றலைத் தமது உள்ளத்தில் வியந்து கொண்டே தமிழறிஞர் பாவலரை வணங்கி விடைபெற்றுச் சென்றார்.

## 8. பொருளின் மதிப்பு

அந்தச் சிறுவனின் குடும்பம் வறுமையால் வாடித் தவித்தது. தனக்கொரு வேலை கிடைத்தால் தங்கள் குடும்பக் கஷ்டம் நீங்குமே என அவன் எண்ணினான். வேலை கிடைப்பது எளிதானதா?

வேலை தேடி அவன் ஒவ்வொரு அலுவலமாக ஏறி இறங்கி வந்தான். எங்கும் 'வேலை இல்லை' என்ற பதிலே

இதனுல் அவன் சோர்ந்துவிடவில்லே. முயற்சிக்கு வெற்றி யுண்டு என்ற நம்பிக்கை அவனிடமிருந்தது. உழைப்புக்கு மதிப்பு உண்டு என்பதில் உறுதி கொண்டிருந்தான் அவன்.

ஒருநாள் சிறுவன் ஒரு அலுவலகத்தில் போய் வேலே கேட்டான். எங்கும் அவனுக்குக் கிடைத்த பதிலேப்போல் அங்கும் இல்லேயென்ற பதிலே கிடைத்தது.

அவ்வலுவலக வாசலே விட்டிறங்கி அவன் வெளியே வந்ததும், அவன் கண்களில் ஒரு பொருள் தென்பட்டது. உடனே அவன் குனிந்து அப்பொருளே எடுத்துக் கொண்டான்.

சிறுவன் தம் அலுவலக முன் எதையோ எடுத்ததை மேலாளர் கவனித்துக் கொண்டார். அது அலுவலகத்தி லுள்ள ஏதேனும் விலேயுயர்ந்த பொருளாக இருக்குமோ என்ற எண்ணம் அவருக்கு. அவர் சிறுவனேக் கூப்பிட்டு அவன் குனிந்து எடுத்த பொருள் என்னவெனக் கேட்டார்.

சட்டையிலிருந்து அப்பொருளே எடுத்துக் கையில் வைத்துக் காட்டினுன் அச்சிறுவன். அவருக்கு அப்பொருள் சட்டென்று கண்ணில் படவில்லே. கூர்ந்து கவனித்தார். வேறென்றுமில்லே. அது ஒரு குண்டுசியேதான்.

மேலாளரின் உள்ளம் நெகிழ்ந்தது. அற்பப் பொரு ளுக்கும் அச்சிறுவன் கொடுத்த மதிப்பு அவரை வியப்பி லாழ்த்தியது. அவனுக்குத் தம் அலுவலகத்தில் உடனே வேலே கொடுத்தார்.

இந்தச் சிறுவன் பிரெஞ்சு நாட்டுக்காரன். இவன் தன் அயரா உழைப்பினுலும் அறிவுக் கூர்மையினுலும் பிற்காலத்தில் பெரிய செல்வந்தனுகத் திகழ்ந்தான். லபைட் என்று புகழ்பெற்ற பெரிய வங்கியாளராக (பாங்கராக) ஆனவன் இவன்தான்.

# 9. ஆசிரியரும் மாணவரும்

மௌலான அபுல்காலம் ஆஸாத் சிறந்த தேசபக்தர்; நிறைந்த புலமையாளர். இளம் பருவத்திலேயே இவர் தம் மேலோங்கிய கல்வியாலும், வியத்தகு திறனலும் புகழ் பெற்றிருந்தார். கவிஞர்களே பாராட்டும் அளவுக்கு இவர் கவிதை பாடும் வல்லமையும் இவரிடம் அமைந்திருந்தது.

ஆஸாதிடம் பல மாணவர்கள் கல்வி பயின்று வந்தனர். முதிர்ந்த வயதுடைய ஒருவரும் கல்வியின்மீது கொண்டுள்ள ஆர்வத்தால் இவரிடம் கல்வி கற்று வந்தார்.

ஆஸாத் இம்முதியவருக்குச் சில பாடங்களைச் சொல்லிக் கொடுத்தார். மறுநாள் அவற்றைக் குறித்து ஆஸாத் இவரிடம் கேட்டபோது இவர் தப்பும் தவறுமாகச் சொன்னர். ஆஸாத்துக்குக் கோபம் வந்துவிட்டது. எரிச்சலும் வெறுப்புங்கொண்டு அவர் அம்முதிய மாணவரைப் பார்த்து, ''எவ்வளவு சொல்லித் தந்தாலும் உமக்குக் கல்வி வராது. அமைதியாக வீட்டுக்குப் போய் புல்லைத் தின்னும்'' என்று சொல்லிவிட்டார்.

இம்மொழிகளைக் கேட்ட அம்முதியவர் துன்பத்தால் வாடினர். தமது திறமைக் குறைவுக்கு வருந்திய அவர் அன்று எதுவுமே சாப்பிடவில்லை.

இச்செய்தியை ஆஸாத்தின் தந்தையார் அறிந்தார். அவர் தமது மகனிடம், ''என்னப்பா, உனக்கு வெட்கம் இல்லையா? உன் தந்தையின் வயதைக் கொண்ட அவரை இவ்வாறு வசைமாரி பொழிந்து விட்டாயே! இதற்காக நீ அவரிடம் போய் மன்னிப்புக் கேட்டு அவரைச் சாப்பிடச் சொல்'' எனக் கூறினர்.

ஆஸாத் அம்முதியவரிடம் சென்று தாம் நடந்து கொண்ட முறைமைக்கு மன்னிப்புக் கோரினர். அவர் தம்

ஆசிரியரிடம், ‘‘நான் தங்கள் மாணவன். என்னைத் தண்டிக்கின்ற உரிமை தங்களுக்குண்டே’’ என்று மொழிந்தார்.

இதைக் கேட்ட ஆஸாதின் உள்ளம் கரைந்துவிட்டது. அப்பெரியவரின் பண்பை நினைந்து நினைந்து வியப்புற்றார். அவர் உணவுண்டு முடியும்வரை ஆஸாத் அவரது அருகிலேயே இருந்தார்.

## 10. கேள்வியும் பதிலும்

ஸ்பெயின் நாட்டு மன்னரான அல்பான்ஸோ தம் ஆட்சிக் காலத்தில் தம்மை இன்னாரெனத் தெரிவித்துக் கொள்ளாது நாடு முழுதும் அடிக்கடி சுற்றிக்கொண்டு வருவார். அந்நேரங்களில் மன்னருக்குரிய தோற்றம் எதுவும் அவரிடம் இருப்பதில்லை. காட்சிக்கு ஒரு சாதாரண பாமர மனிதன்போலவே இவரது நடையுடை பாவனைகள் இருக்கும்.

ஒரு முறை இவர் தலைநகரத்துக்கும் மிகத் தொலைவி லுள்ள நகரம் ஒன்றுக்குப் போய் ஒரு விடுதியில் தங்கி யிருந்தார். விடுதித் தலைவனிடம் இவர் தமக்கு ‘க்ஷவரம்’ செய்துகொள்ள ஒரு கண்ணாடி வேண்டுமெனக் கேட்டார். அவன் அவருக்கு ஒரு நிலைக் கண்ணாடியைக் கொடுத்து உதவினான்.

மன்னர் தம் வேலையைச் செய்து கொண்டிருந்தார். விடுதித் தலைவன் இவரையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். பின்னர் அவன் அவரிடம் ‘‘அடிக்கடி இங்கு வருகின்றவர்போல் நீங்கள் தெரியவில்லையே! அரசர் அரண்மனையில் இருப்பவர்களோ!’’ என்று வினவினான்.

மன்னர் இதற்கு, "குறிப்பாகச் சொல்லிவிட்டீர்களே! ஆம், நான் அங்கே இருப்பவன்தான்" என்று பதிலளித்தார்.

விடுதித் தலைவன் மன்னரிடம், "உங்களைப் பார்த்ததும் எனக்கு அப்படித் தோன்றியது. எனது ஊகம் சரியாயிற்றல்லவா! அங்கு நீங்கள் ஊழியராக இருப்பீர்கள், அப்படித்தானே?" என்று கேட்டான்.

"ஆம், அதுவும் தவறில்லை" என்று பதில் கொடுத்தார் மன்னவர்.

"உங்களுக்கு அங்கு என்ன வேலையோ?" என்று மீண்டும் வினவினான் அவ்விடுதித் தலைவன்.

"அங்கே ஒன்று, இரண்டா? எத்தனையோ வேலைகள் எனக்கு. இப்போது மன்னருக்கு நான் க்ஷவரம் செய்து கொண்டிருக்கிறேன்" என்று கூறினார் அவர்.

## 11. சூடான பதில்

அயர்லாந்து சென்றிருந்த தலைவர் சத்தியமூர்த்தி அங்குப் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசிக்கொண்டிருந்தார்.

இந்திய மக்களை அடிமைப்படுத்திக் கொண்டிருக்கும் ஆங்கில ஏகாதிபத்தியத்தின் அட்டூழியங்களை அம்பலப் படுத்தியும், அடிமைத் தளையை அறுத்தெறிய எழுச்சியுற்ற சுதந்திர இயக்கத்தைக் குறித்தும் விளக்கிக் கூறினார். இந்தியா தன்னாட்சி நடத்தும் தகுதி பெற்று விளங்கு வதையும் குறிப்பிட்டுக் கொண்டார்.

அக்கூட்டத்தில் எங்கேயோ ஒரு மூலையிலிருந்து ஆங்கிலேயன் ஒருவன், "இந்தியாவில் ஒற்றுமை உண்டா? அங்குதான் வகுப்புக் கலவரங்கள் நடக்கின்றனவே!" எனக் கூறினான்.

இக் கேள்விக்குப் பதிலாக சத்தியமூர்த்தி, ''அப்படியே வைத்துக் கொண்டாலும் இறைவன் ஆங்கிலேயனை எப்போது 'ஸ்பெஷல் போலீஸ்கார'ஞக நியமித்தான் என்பதுதான் தெரியவில்லை'' என்று உரைத்தார்.

இப்பதிலைக் கேட்ட பிறகு அவ்வாங்கிலேயன் இருந்த இடமே தெரியவில்லை.

## 12. இலக்கிய மேதையின் வாழ்வில்

எமிலிஸோலா சிறந்த பிரஞ்சு எழுத்தாளர். எளிய குடும்பத்தில் பிறந்து ஏழ்மையில் வருந்தியவர். இவருக்குத் தம் குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பு தம் எழுத்தைக் கொண்டே நடத்த வேண்டியதிருந்தது. ஆகவே நாள் முழுதும் தளராது எழுதிக்கொண்டிருந்தார். இவரது படைப்புக்களில் நீதியும் நாட்டின் சிறப்பும் ஒளிவீசிக் கொண்டிருக்கும்.

ஒருநாள் இவரது குடும்பச் செலவுக்குப் பணம் இல்லாதிருந்தது. இவரது மனைவி இவரைப் புத்தகக் கம்பெனி யாரிடமிருந்து கொஞ்சம் பணம் வாங்கி வர வலியுறுத்திக் கொண்டிருந்தார்.

தாம் பிரசுரம் செய்யக் கொடுத்த புத்தகத்துக்குப் புத்தகக் கம்பெனியார் பணம் தருவாரோ என்ற ஐயம் இவருக்கு. எனினும் மனைவியின் வலியுறுத்தலைப் பொறுக்க இயலாத இவர், அக்கம்பெனியை நோக்கி நடக்கலானர்.

அப்போது நல்ல மழையும் காற்றும் பீத்தல் குடையொன்றைப் பிடித்துக்கொண்டு இயற்கையுடன் போராடியவாறு ஸோலா, புத்தகக் கம்பெனியைச் சென்றடைந்தார்.

அங்குத் தமது புத்தகங்கள் பரபரப்புடன் விற்றுக் கொண்டிருப்பதை ஸோலா கண்டார். ஆனல் இவர் அங்கே வந்து நின்று கொண்டிருப்பதை யாருமே கவனிக்கவில்லை; தமது கம்பெனிக்கு ஸோலா வந்திருப்பதை மிகுந்த நேரத்துக்குப் பிறகு கண்டார் முதலாளி. அவரை இனிய முகத்தோடு வரவேற்றுக் கொண்டார்.

ஸோலா தயங்கியபடியே கம்பெனி முதலாளியிடம், "ஐயா, கொஞ்சம் பணம் உங்களால் தர முடியுமா?" என்று கேட்டார்.

முதலாளி பற்களெல்லாம் தெரியச் சிரிக்கலானர். அவர் தமது மனைவியை அழைத்து, 'ஸோலா வந்திருக் கிறர். அவருக்குக் கொஞ்சம் பணம் வேண்டுமாம்'' என்று தெரிவித்தார்.

இம்மொழிகளைக் கேட்ட ஸோலாவின் முகத்தில் ஏமாற்றம் பரவியது. பணம் கிடைக்காதோ என்ற ஐயம் அவருக்கு.

இந்நேரம் முதலாளி ஒரு கவரை எடுத்து, ''ஸோலா, இதை உங்களுக்கு அனுப்பவே இருந்தேன். நீங்களே வந்துவிட்டீர்கள்; கொண்டு செல்லுங்கள்'' என்று சொல்லி அதைக் கொடுத்தார்.

என்னமோ, ஏதோ என்ற வியப்புடன் ஸோலா அக் கவரை வாங்கிப் பிரித்துப் பார்த்தார். அதனுள் 18,000 பிராங்க் பணத்திற்குரிய செக் ஒன்றிருந்தது. இன்பக் கடலில் திளைத்தார் ஸோலா.

செக்கை மாற்றிப் பணம் வருவதுரை குடும்பம் பட்டினியால் வாடிவிடுமே என்ற நினைவு ஸோலாவிடம் எழுந்தது. செக்கை வழங்கிய முதலாளிக்கு அவர் நன்றி கூறிவிட்டு, ''ஏதேனும் சில்லறைப் பணம் இருந்தால் கொஞ்சம் கொடுங்கள்" எனக் கேட்கலானர்.

தமது பையிலிருந்த பணத்தையெல்லாம் சேர்த்துக் கொடுத்தார் முதலாளி. ஸோலா முகத்தில் மலர்ந்த மலர்ச்சியை என்னவென்று கூறுவது?

காகிதத்திலிருந்த பணத்தைவிடக் கையில் ரொக்கமாக இருந்ததே அவருக்கு அப்போது மதிப்புடையதாக இருந்தது. அதைக்கொண்டு அன்றையச் செலவை நடத்தி விடலாமல்லவா!

## 13. உழைப்பின் உயர்வு

நபிகள் நாயகம் அவர்கள் சாயுங்கால வேளையில் தமது தோழர்களோடு அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

வலுவும் திடமும் கொண்ட சாதாரண மனிதன் ஒருவன் அங்கே வந்து நபியவர்களை வணங்கிக்கொண்டு நின்றான்; அவர் அவனது கரங்களைப் பற்றிக்கொண்டு கண்களில் வைத்து ஒற்றிக்கொண்டார். அம்மனிதன் நபியவர்களை வணங்கி விடை பெற்றுச் சென்றான்.

அங்கிருந்த தோழர்கள் நபியவர்களைப் பார்த்து, ''அவன் சாதாரண மனிதனாயிற்றே! அவனது கரங்களையெடுத்துத் தாங்கள் கண்களில் வைத்து ஒற்றிக்கொள்ள என்ன காரணம்!'' என வினவினார்கள்.

நபியவர்கள் தோழர்களிடம், ''ஆம், அவன் சாதாரண மனிதன்தான். ஆனால் அயர்வின்றி உழைத்து உழைத்து அவன் கரங்கள் காய்ப்பேறியுள்ளன; உழைப்பின் சின்னங்களான அக்கரங்களுக்கு நான் மிகவும் மதிப்புக் கொடுக்கிறேன்'' என்று மதிப்பளித்தார்கள்.

உழைப்புக்கு நபியவர்கள் கொடுத்த மதிப்பு எவ்வளவு உயர்ந்தது என்பது இந்நிகழ்ச்சியிலிருந்து விளங்குகிறதல்லவா!

## 14. ஜனாதிபதியின் பதில்

ஒருமுறை இராணுவத்திலிருந்து சில வீரர்கள் தப்பித்துச் சென்று விட்டனர். இராணுவ நீதிமன்றம் இவ்வீரர்களை விசாரணை செய்து இவர்களுக்கு மரண தண்டனை வழங்கியது. தண்டனையை நிறைவேற்ற ஜனாதிபதி லிங்கனின் இசைவு வேண்டுமல்லவா! அதற்காக அதிகாரி ஒருவன் ஜனாதிபதி லிங்கன் இருக்குமிடம் சென்று அவரைச் சந்தித்தான்.

அதிகாரி ஜனாதிபதியிடம், "ஜனாதிபதியவர்களே, இத்தண்டனையைத் தவறாது நிறைவேற்ற வேண்டும். இராணுவத்தைவிட்டு ஓடுகின்றவர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையாக அமையும். இல்லாவிட்டால் மேலும் மேலும் ஓடுகின்றவர்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டே போகும்; இதனால் இராணுவத்தின் சக்தியே குறைந்து அதற்கும் பெருந் தீங்கு விளையும்" என்று தெரிவித்தான்.

ஜனாதிபதி இதற்குப் பதிலாக, "படையதிகாரியே, நீர் சொல்வது உண்மைதான். ஆனால் இப்போது நம் நாட்டில் கணவனை இழந்த கைம்பெண்களின் தொகை பெரிதாக உள்ளது. இன்னும் இதை மிகைப்படுத்த எண்ணுகிறீரா? இது என்னால் ஆகவே ஆகாது" என உறுதியுடன் மறுத்து விட்டார்.

## 15. நீதியின் முன் யாவரும் சமமே

மதுரையை ஆண்டு வந்த இராணி மங்கம்மாள் வீரம் செறிந்தவள்; கடவுள் பக்தி மிகுந்தவள். அன்பு கனிந்த நெஞ்சுடையவள்; தான தருமங்கள் செய்து அறப்பணிகள் பெருக்குவதில் முனைந்து நின்றவள். அனைத்துக்கும் மேலாக நீதியை உயிர்போல் பாதுகாத்து வந்தாள்.

இராணி தம் இளைய தம்பிக்கு ஆட்சியில் சில உரிமைகளை வழங்கியிருந்தாள். ஆனால் அவன் அவற்றைத் தவறான வழிகளில் பயன்படுத்தி வந்தான்.

ஒருமுறை இவன் இராணி மங்கம்மாள் ஆட்சிக்கே மாறாகக் களங்கம் ஏற்படும் முறையில் கொடிய பழியொன்றைச் செய்துவிட்டான். அரசியின் காதுகளில் இச் செய்தி விழுந்தது. உடனே தன் தம்பியைக் கைது செய்து நீதி விசாரணை செய்ய ஏற்பாடு செய்தாள்.

இராணியின் தம்பி செய்த பழிக்கு அவனுக்கு வழங்க வேண்டியது மரணதண்டனையே; அறங்கூறும் மன்றத் தீர்ப்பாளர்கள், அரசியின் தம்பிக்கு இத்தகைய கொடிய தண்டனையைத் தாங்கள் எவ்வாறு வழங்குவது எனத் தயங்கினார்கள். எனவே தீர்ப்புக்குரிய நாளும் காலம் கடந்து சென்றுகொண்டிருந்தது.

ஒற்றர்கள் மூலம் இச்செய்தியை அறிந்தாள் இராணி மங்கம்மாள், மறுநாள் தானே அறமன்றத்துக்கு வருவதாக அறிவிப்புக் கொடுத்தாள்.

அறங்கூறும் மன்றத்தில் அன்று மக்கள் கூட்டம் பெருகியிருந்தது. அரசி செய்யும் தீர்ப்பை அறிய மக்கள் உள்ளத்தில் எழுந்த ஆர்வமே இதற்குக் காரணம்.

இராணியின் தம்பியான குற்றவாளி அறங்கூறும் மன்றத்துக்குக் கொண்டுவரப்பட்டுக் கைதிக் கூண்டில் நிறுத்தப்பட்டான்; அவனது கால்களிலும் கைகளிலும் இரும்புச் சங்கிலிகள் பிணைக்கப்பட்டிருந்தன. அவனது வாடிய முகமும் வதங்கிய மேனியும் ஆடிய சாயலும் அயர்ந்த நிலையும் மங்கம்மாள் நெஞ்சத்தை அதிரவைத்தன. உடன் பிறந்த பாசம் அவள் விழிகளில் நீர்த் துளிகளை மல்க

வைத்தது. ஆயினும் அவள் நீதியின் பீடத்திலன்றோ அமர்ந்துள்ளாள்! அங்கே வேண்டியவர் வேண்டாதவர் என்றோ, உயர்ந்தோர் தாழ்ந்தோரென்றோ பிரிவுக்கிட மில்லையன்றோ!

அறங்கூறும் மன்றத்தின் உறுப்பினர்களை நோக்கித் தீர்ப்பை வழங்கக் கூறினாள் இராணி. அவர்களோ தயங்கிக் கொண்டிருந்தனர். நிலைமையை உணர்ந்து கொண்ட அவள், தானே தீர்ப்பை அறிவித்தாள். அநீதம் இழைத்த தம்பிக்கு நீதியின்படி கொடுக்க வேண்டிய மரண தண்டனையாகிய தீர்ப்பையே அறிவித்தாள் ராணி.

## 16. தமிழ்த் தாத்தாவை ஊக்கியவர்

தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராய்ப் பணி செய்து வந்தபோது, இவரது தமிழ்ப் புலமையைக் கேள்விப்பட்ட சேலம் இராமசாமி முதலியார் என்பவர் ஐயர் அவர்களோடு நெருங்கிய நட்புக் கொண்டார்; முதலியார் அக் காலத்தில் கும்பகோணத்தில் முன்சீபாகப் பணியாற்றிக் கொண்டிருந்தவர்.

இருவரும் நெருங்கிய நண்பர்களான பின்னர் அடிக்கடி இவர்கள் சந்தித்து உரையாடிக் கொள்வதும் தமிழிலக்கிய நுட்பங்கள் குறித்துப் பேசிக் கொள்வதும் வழக்கமாக ஆயிற்று.

ஒருநாள் முதலியார் ஐயரவர்களிடம், “தமிழில் நிறைய இலக்கியங்கள் இருந்தன. அவையெல்லாம் கடலால் விழுங்கப்பட்டு மறைந்தன என்றுதான் நாம் பழம் பெருமையைப் பேசிக் கொள்கிறோம். தற்போதிருக்கும் இலக்கியங்களையாவது அச்சேற்றும் முயற்சி நம்மிடம் இல்லையே!” எனக் கூறி நொந்து கொண்டார்.

முதலியார் தம்மிடமிருந்த ஒரு பழம் ஏட்டுச் சுவடியைக் கொண்டுவந்து, ஐயரவர்களிடம் கொடுத்து, "தாங்கள் இதைப் பரிசோதித்து அச்சிடுங்கள். இதற்குச் செலவாகும் பணத்தை நான் தந்து கொள்கிறேன்" எனக் கூறினார்.

முதலியாரின் உரைகள் ஐயரிடம் பெரும் எழுச்சியை ஏற்படுத்தின. நமது பழம் நூற்கள் ஏட்டுச் சுவடிகளாக இப்போதும் கிடைக்கலாமே என்ற நம்பிக்கை இவரிடம் எழுந்தது. அவைகளை அச்சில் கொண்டு வந்தால் அதற்கு இணையான பணி வேறு எதுவும் இல்லையென ஐயர் தம்முள் தெளிந்து கண்டார். இதற்கான ஊக்கமும் உணர்ச்சியும் அவரிடம் மேலோங்கி நின்றன.

முதலியார் கொடுத்த ஏட்டுச் சுவடியை வீட்டுக்குக் கொண்டு வந்து பிரித்துப் பார்த்தார் ஐயர். அது 'சிந்தாமணி' ஏடாக இருந்தது. அவரது உள்ளம் மகிழ்ச்சியால் கூத்தடித்தது.

அந்நூல் ஏடுகளைப் பிரித்துப் பார்த்தபொழுது அதில் பல பகுதிகள் சிதைந்திருந்தன. சில இடங்களில் எழுத்துக்கள் தெளிவில்லாதிருந்தன. எனவே அதை ஒப்பு நோக்கிப் பதிப்பிக்க வேறு ஏடுகளும் தேவைப்பட்டன.

இதன் பின்னர் ஐயரவர்கள் தம் பெரும்பகுதிப் பொழுதையும் ஏடுகள் தேடுவதிலேயே செலவு செய்து வந்தார். இம்முயற்சியில் அவர் பட்ட தொல்லைகளும் துயரங்களும் எண்ணிலடங்கா; அவை கேட்போர் நெஞ்சங்களை உருக்குவன. எனினும் இவற்றைப் பொருட்படுத்தாது அவர் ஊர்கள்தோறும் வீடுகள்தோறும் சுற்றியலைந்து ஆயிரக்கணக்கான ஏடுகளைத் திரட்டினார். சிந்தாமணி ஏடுகளிலேயே 25 கிடைத்தன.

இந்நூலைப் பரிசோதித்து அச்சிடும்போது ஐயரவர்களுக்கு ஏற்பட்ட நெருக்கடி சிறிதளவன்று; ஆயினும் அவர் உள்ளம் தளராது, ஊக்கம் குலையாது ஆறு ஆண்டுகள் அரிதின் முயன்று அந்நூலை வெளியிட்டார்.

ஐயரவர்கள் பதிப்புப் பணியில் சிந்தாமணியே முதல் நூலாக வெளிவந்தது. இதைத் தொடர்ந்தே ஏனைய நூற்களும் வெளிவந்தன. ஐயரவர்களின் அயராத உழைப்பால்—சிறந்த பணியால் இன்று தமிழன்னை எழில் பெற்று விளங்குகிறாள்.

## 17. இரக்க உள்ளம்

ஜான்ஸி நாட்டை ஆண்டுவந்த இராணி இலட்சுமிபாய், ஒருநாள் ஆலயத்துக்குப் போய் தெய்வ தரிசனம் செய்து விட்டுத் திரும்பிக்கொண்டிருந்தாள்.

அவள் வந்துகொண்டிருந்த பாதையை விட்டுச் சற்றுத் தொலைவில் கூக்குரல்கள் முழங்கிக் கொண்டிருந்தன. இதன் காரணத்தை அறிய விரும்பினாள் இராணி. உடனே பல்லக்கை நிறுத்தித் தன்னைத் தொடர்ந்து வரும் அமைச்சரிடம் இதைத் தெரிந்து கொள்ளக் கட்டளை வழங்கினாள்.

அமைச்சர் உடனேயே ஒரு வீரனை அனுப்பி இதை அறிந்து வருமாறு கூறினார். வீரன் கொண்டுவந்த செய்தியை அறிந்ததும் அவர் இராணியிடம் வந்து, "அரசியாரே, பிச்சைக்காரர்கள் குளிர் தாங்க மாட்டாமல் கூச்சலிட்டுக் கொண்டிருக்கிறார்கள். வேறொன்றுமில்லை" என்ற விவரம் தெரிவித்தார்.

இராணியின் உள்ளம் இது கேட்டு நெகிழ்ந்தது.' உடல் என்பது எல்லோருக்கும் ஒரே அமைப்புத்தானே? இயற்கையின் தாக்குதலை எவ்வாறு அந்த வறியவர்கள் தாங்கிக் கொள்வார்கள்? அதற்குரிய வசதிகள் அவர்களுக்கேது?' என எண்ணி அவள் வேதனைப்பட்டாள்.

அந்த இடத்திலேயே அமைச்சரிடம் அரசி, "இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு பிச்சைக்காரருக்கும் ஒவ்வொரு அங்கியும் போர்வையும் வழங்க வேண்டும்; மூன்று நாட்களுக்குள் இவையனைத்தும் வந்து சேர வேண்டும்" எனக் கட்டளை வழங்கினள்.

அமைச்சர் அரண்மனையை அடைந்ததும் இதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யலானர். மூன்று நாட்களில் அங்கிகளும் போர்வைகளும் அரண்மனையில் வந்து குவிந்தன.

அரசி இலட்சுமிபாய் நாட்டிலுள்ள பிச்சைக்காரர்கள் அனைவருக்கும் அழைப்பு விடுத்தாள். எல்லோரும் வந்து அரண்மனை வாசலில் திரண்டனர்.

தனது கையாலேயே ஒவ்வொரு பிச்சைக்காரருக்கும் அங்கியும் போர்வையும் வழங்கினள் அரசி; அதைப் பெற்றுக் கொண்ட அந்தப் பிச்சைக்கார மக்களின் முகங்களில் நன்றி யுணர்ச்சி பெருக்கெடுத்தோடியது. உள்ளங்களில் அன்பு சுரந்தது. அவர்கள் அரசியை, "மகாராணியாரே. எங்களுக்கு நீங்களே பெற்ற பெரிய தாயினும் தாய்; நீடூழி நீங்கள் வாழ்க!" என வாழ்த்தி விடைபெற்றுச் சென்றனர்கள்.

## 18. விஞ்ஞான மேதையும் நிருபரும்

ஒருமுறை விஞ்ஞானி ஈன்ஸ்டீன் மூட்டை முடிச்சுகளைச் சுமந்து கொண்டு நியூயார்க் நகரத் தெருவொன்றின் வழியாகச் சென்று கொண்டிருந்தார். மக்கள் நெருக்கம் மிகுந்த அவ்வீதியில் அவரை யாரும் அடையாளம் கண்டுகொள்ளவில்லை.

ஒரு பத்திரிகை நிருபர் அவரை அடையாளம் கண்டு கொண்டார். ஈன்ஸ்டீன் பக்கமாக அவர் வந்து, "நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள். உங்களை யாருமே அடை

யாளம் கண்டுகொள்ளவில்லையே. ஒரு சினிமா நடிகை மட்டும் இப்படி வந்திருந்தால் எவ்வளவு கூட்டம் கூடி யிருக்கும்?'' என்று கூறினர்.

ஈன்ஸ்டீன் அந்நிருபரிடம், "உண்மைதான், என்னிடம் பார்த்து மகிழ என்ன இருக்கிறது?'' என அமைதியாக மொழிந்தார்.

## 19. அன்னையின் விருப்பம் நிறைவேற்றியவர்

விநோபா பாவேயின் இளமைப் பருவம்; அப்போது அவர் பெயர் விநாயக். படிப்பில் திறமையுடன் விளங்கினர். எதிலும் ஒழுக்கமும் கட்டுப்பாடும் கொண்டவர்.

இவரது அன்னையார் ஒருமுறை கீதைச் சொற்பொழி வைக் கேட்கப் போயிருந்தார். சுலோகங்கள் சமஸ்கிரு தத்தில் இருந்தமையால் அவருக்குத் தெளிவாக எதுவும் புரியவில்லை. வீட்டுக்கு வந்து, அவர் தம் புதல்வர் விநாயக்கை அழைத்தார். அவரிடம் அன்னையார், "நான் கீதைச் சொற்பொழிவுக்குப் போயிருந்தேன். எல்லாம் சமஸ்கிருதத்திலேயே சொன்னர்கள். மராத்தியில் இருந் தால் எனக்கும் படிக்க வாய்ப்பாக இருக்கும்'' எனக் கூறினர்.

தமது அன்னையின் விருப்பத்தை நிறைவு செய்யும் முனைப்போடு விநாயக், மராத்தி மொழியில் விளக்கமுள்ள கீதை நூல் ஒன்றை வாங்கி வந்து அன்னையிடம் கொடுத்தார்.

அதைப் படித்துப் பார்த்த அவர், "உரை நடையிலல்லவா இது இருக்கிறது! மராத்திச் செய்யுளில் இருந்தால் பாடிப் படிக்கலாமே!'' என்று தமது கருத்தைக் கூறினர்.

மராத்திச் செய்யுளிலுள்ள கீதை ஒன்றைக் கொண்டு வந்து தாயிடம் கொடுத்தார் விநாயக்.

அவர் அதைப் பன்முறை படித்துப் பார்த்தார். அதுவும் அவருக்கு மிகக் கடினமாக இருந்தது. அவர் தம் மகனிடம், ‘‘இதிலுள்ள செய்யுள்கள் கடினமாக அமைந்துள்ளன. செய்யுள் எளிமையாக இருந்தால் எல்லோரும் படித்துக் கொள்ளலாமல்லவா?’’ என்று தம் கருத்தைக் கூறினர்.

விநாயக் ‘‘இதற்கு என்ன செய்ய?’’ என்று சிந்தித்துக் கொண்டிருந்தார். அன்னை படித்துணரக் கீதை நூலைக் கொடுக்க முடியவில்லையே என்ற கவலை அவருக்கு.

தாயார் மீண்டும் தம் மகனிடம், ‘‘ஏன் விநாயக், எளிமையான மராத்தி மொழியில் எனக்காக நீயே இதை ஆக்கிக் கொடேன்’’ என்று தம் விருப்பத்தை வெளி யிட்டார்.

‘‘தம்மால் இது முடியுமா?’’ என்று அப்போது விநாயக் சிந்தித்துப் பார்த்தார். அவரால் அப்போது முடிவில்லைதான் ஆனால் பல ஆண்டுகளுக்குப் பின் தம் அன்னையின் விருப்பப் படி அவர், ‘கீதாயா’ நூலை மாரத்தியில் ஆக்கினர். ஆனால் அதைப் படிக்க அவரது அன்னைதான் உலகத்தில் இல்லை.

## 20. பாடல் ஒன்றுக்கு ஒரு பொன் தேங்காய்

பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகிய சேதுநாட்டை (இராமேசுரமும் அதைச் சார்ந்த பகுதியும்) ஆண்டு வந்த தளவாய் இரகுநாத சேதுபதி தமிழ்ப் புலமை சான்றவராய் இருந்ததோடு, புலவர் பெருமக்களைக் கண்போல் காத்து ஆதரவுகள் நல்கிப் பேணி வந்தார்.

இவரது அவையைப் புலவர்கள் பலர் அணிசெய்து வந்தனர். இவருள் தலைசிறந்து விளங்கியவர் அமுத கவிராயர் என்பவர். இவர் தம் புலமைச் சிறப்பும், கவிதை பாடும் வல்லமையும் பிற புலவர்களை இவர்மீது பொருமை கொள்ள வைத்தன.

இரகுநாதசேதுபதி தம் அவைப் புலவர்களோடு அரண்மனைப் பூங்காவில் அமர்ந்திருந்தார். மாலை நேரம் புலவர்கள் புலமைச் சுனைகளில் மூழ்கிய மன்னவர், தம் உள்ளத்தை இன்பத்தில் மிதக்கவிட்டுக் கொண்டிருந்தார்.

அப்போது அரசர் புலவர்களைப் பார்த்து, ''அகப் பொருளில் ஒவ்வொரு துறையிலும் ஒரு பாடல்தானே பாடப்பட்டு வருகிறது. மிகுதியாகப் பாட முடியுமா?'' எனக் கேட்டார்.

ஒவ்வொரு புலவரும் தம்தம் ஆற்றலுக்கேற்பத் தம்மால் 'முப்பது பாடமுடியும்' 'நாற்பது பாட முடியும்' என்று கூறினார்கள்.

அமுத கவிராயரோ 'நான் நூறு பாடுவேன்' என்றார்

மற்றப் புலவர்கள் அமுத கவிராயர் மீதுள்ள தங்கள் பகைமையைத் தீர்த்துக் கொள்ள இதுவே தருணம் என எண்ணி, ''அவர் (நான்+நூறு) நானூறு பாடுவாராம்'' எனக் கூறினார்கள்.

அமுத கவிராயர் தம்மை விட்டுக் கொடுக்காதபடி, ''பாடினால் தீர்கிறது'' என மிடுக்காகப் பதில் அளித்தார்.

தாம் சொல்லியவாறே அமுத கவிராயர் 'நாணிக் கண் புதைத்தல்' என்னும் ஒரே துறையில் நானூறு கவிதைகள் பாடினார். பாடல் ஒவ்வொன்றும் முதல் இரண்டடிகள் மன்னர் சேதுபதியின் சிறப்பையும் ஏனைய இரண்டடிகள் அகப்பொருள் கருத்தையும் தெரிவிப்பதாய் இருந்தது.

இப்பாடல்களின் சொல்லழகிலும் கருத்தழகிலும் உள்ளம் களிப்புற்ருர் இரகுநாத சேதுபதி. இந்நூலின் அரங்கேற்றம் நடந்தபோது ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காய் வீதம் நானூறு பொன் தேங்காய்கள் மன்னர் அவருக்குப் பரிசாக அளித்தார். மேலும் 'பொன்னுங்கால்' என்ற ஊரையும் மன்னர் கவிஞருக்குப் பரிசாக அளித்து அவரைச் செழுமைப்படுத்தினர்.

## 21. இராமதீர்த்தரும் அமெரிக்கப் பெண்ணும்

சுவாமி இராமதீர்த்தர் அமெரிக்காவில் தங்கியிருந்த நாட்கள்.

ஒரு செல்வச் சீமாட்டி தன் மகனை இழந்த பிரிவால் வாடிக்கொண்டிருந்தாள். மகன் மறைவு. அவள் மனத்தில் அடிக்கடி தோன்றி அவளிடம் ஏக்கத்தை வளர்த்துக் கொண்டிருந்தது. இராமதீர்த்தரைச் சந்தித்து, அவரிடம் தன் கவலையைச் சொல்லி ஆறுதல் பெற வந்திருந்தாள்.

இராமதீர்த்தர் அவளிடம், "அம்மையே, நீ கவலையை மாற்றவும், மகிழ்ச்சியை வாங்கவும் வந்திருக்கிருயே! ஆனல் நீ வாங்க விரும்பும் மகிழ்ச்சியின் விலை மிகவும் கூடுதலாயிற்றே! என்று கூறினர்.

"என்ன விலையானலும் ஆகட்டும். எனக்கு மகிழ்ச்சி வேண்டும்" எனப் பதிலுரைத்தாள் அப்பெண்.

"நீ சிறுவனைச் சாவுக்குக் கொடுத்துவிட்டுத் தத்தளிக்கிருய்! அதுவன்ருே உனது ஏக்கத்துக்குக் காரணம்! சரி, அப்படியானல் நீ ஒரு நீக்ரோ சிறுவனைத் தத்துப் பிள்ளையாக ஏற்றுக் கொண்டு அவனை அன்போடு வளர்த்து வா' என்று இயம்பினர் இராமதீர்த்தர்.

இச்சொற்கள் அந்த அமெரிக்கப் பெண்ணின் நெஞ்சில் 'சுரீர்' எனத் தைத்தன. ஏனெனில் நீக்ரோக்களிடம் அமெரிக்கர்களுக்கு அவ்வளவு வெறுப்பு இருந்தது.

அப்பெண் இராமதீர்த்தரிடம், "இது முடியாத காரியம்" எனத் தன் கருத்தை வெளியிட்டாள்.

"அப்படியானல் நீ மகிழ்ச்சியைப் பெறுவதும் முடியாத காரியந்தான்" என்று பதிலளித்தார் இராமதீர்த்தர்.

இப்பெண் முதலில் இராமதீர்த்தரின் கருத்துரையை மறுத்த போதிலும், பின்னர் அதன்படியே நடந்து கொண்டாள்.

## 22. மகனுக்குத் தந்தையின் பரிசு

மகாகவி இரவீந்திரநாதர், இறைவன்மீது 'நைவேத் தியம்' என்ற நூலைப் பாடலானர். இதிலுள்ள பாடல்களைத் தம் தந்தையாராகிய தேவேந்திரநாத தாகூரிடம் அடிக்கடிப் பாடிக் கேட்பித்து வந்தார்.

முதுமையில் தளர்ந்து, இறைவன் நினைவில் தோய்ந் திருந்த தேவேந்திரநாதருக்கு மகன்பாடி வந்தஇப்பாடல்கள் அமைதியை அளித்து வந்தன.

இப்பாடல்கள் மூலம் தந்தையார் மகனின் இறைபக்தி யைத் தெரிந்துகொண்டார். அதை அவர் வெளியிடும் முறைமை தந்தையின் உள்ளத்தைக் களிப்பித்து, அவர் தம் புதல்வரைப் பார்த்து, "இவ்வாறு கவிதை இசைக்கும் இசைவாணர்களை, முற்காலத்தில் மன்னர்கள் பரிசளித்து மகிழ்விப்பார்கள். இப்போது அவ்வாறு செய்பவர்கள் யாரும் இல்லையே! எனவே நானே உனக்குப் பரிசளிக்கிறேன்" என்று சொல்லிப் பெருந்தொகை ஒன்றை மகனுக்குப் பரிசாகக் கொடுத்தார்.

இப்பணத்தைக் கொண்டு ரவீந்திரர் 'நைவேத்தியம்' நூலை அச்சிட்டுக்கொண்டார். நூல் வெளிவந்ததும் அதைத் தம் தந்தையிடம் கொண்டு கொடுத்து மற்றொரு பரிசை விரும்பினர். அது, ஒரு கலைக்கழகம் நடத்த சாந்தி நிகேதனத்தில் இடம் தரவேண்டும் என்பதே.

தேவேந்திரநாத தாகூர் இதற்கும் மகிழ்ச்சியோடு இசைவளித்தார்.

## 23. தேவாலயத்தில் திலகர்

'சுயராச்சியம் நமது பிறப்புரிமை' என்னும் தாரக மந்திரத்தை மக்களிடையே முழக்கி விடுதலையுணர்ச்சியைத் தூண்டியவர் பாலகங்காதர திலகர் ஆவர். தேசியப் போராட்டத் தீயில் குதித்த அவருக்கு அரசாங்கம் பன்முறை சிறைத் தண்டனை வழங்கிக் கொடுமைப் படுத்தியது. பிறந்த பொன்னாட்டின் விடுதலைக்காக வேண்டி அவர் அக்கொடுமைகளையெல்லாம் பேரின்பமாகக் கருதினர்.

இங்கிலாந்து சென்றிருந்த திலகருக்குத் தாய்நாடு திரும்பியதும் சுதந்திர இயக்க வளர்ச்சியின் பொருட்டுச் சென்னைக்கு வரவேண்டிய நிலை ஏற்பட்டது. சென்னை மக்கள் அவருக்குப் பெரும் வரவேற்பளித்துப் பாராட்டினர். அவரது தேசபக்தியையும் தியாகத்தையும் வாயாரப் புகழ்ந்தனர்.

சென்னையிலுள்ள தலைவர்கள் அவரை ஆலயம் ஒன்றுக்கு அழைத்துச் சென்றனர். ஆலய அர்ச்சகர் அவரை நேராகக் கருப்பகிரகத்துக்கே அழைத்துச் சென்று விட்டார். தேசபக்தரான அவ்வர்ச்சகர் திலகரின் இறை பக்தியையும் வைதீகப் பற்றையும் ஏற்கனவே தெரிந்திருந்

தவர். திலகர் பெயரால் அர்ச்சனை செய்ய வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார் அவர்.

திலகர் அர்ச்சகரிடம், "இந்த அர்ச்சனைகளை ஏற்றுக் கொள்ளும் தகுதி இப்போது எனக்கில்லை. ஏனென்றால் நான் கப்பல் பயணம் செய்துவிட்டு வந்திருக்கிறேன். அதற்கு இன்னும் கழுவாய்கூடத் தேடிக்கொள்ளவில்லை" என்று கூறினார்.

அர்ச்சகர் இதற்குப் பதிலாக, "தாங்கள் கப்பல் பயணம் செய்து வெளிநாடு போனதே தாய்நாட்டுப் பணிக் காகத்தானே! நல்ல இலட்சியத்துடன செய்யும் தொண் டுக்குக் கழுவாய் தேவையில்லை" எனக் கூறினார்.

இதன் பின்னர் திலகர் அர்ச்சனை செய்துகொள்ள இசைந்து கொண்டார்.

## 24. வித்தையின் விலை

இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் ஒரு முறை கங்கைக் கரையில் தியானத்தில் அமர்ந்திருந்தார். தியானம் முடிந்து கண் திறந்தபோது, ஒருவர் நீர்மேல் நடந்து வருவதைக் கண்டார். இதைப் பார்த்து இராமகிருஷ்ணர் சிரிக்க லானார்.

அம்மனிதர் இராமகிருஷ்ணர் அருகே வந்து, "இந்தக் கடினமான வித்தையை நான் பத்து ஆண்டுகளாக முயன்று கற்றுத் தேர்ந்துள்ளேன்; இதைக் கண்டு நீங்கள் ஏனே சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

"இல்லை! நீர் கற்ற வித்தை காலணுவுக்குத்தான் பயன் படும்" என்று பதில் கூறினார் இராமகிருஷ்ணர்.

"அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று மீண்டும் கேட்டார் அம்மனிதர்.

"காலணு கொடுத்தால்தான் படகில் கரையைக் கடந்து விடலாமே!" என்று பதிலளித்தார் இராமகிருஷ்ணர்.

## 25. கனிவுள்ளம்

ஐதராபாத் தெலுங்கானுப் பிரதேசத்தில் வறுமையாலும் ஏழ்மையாலும் குழப்பங்களும் கலவரங்களும் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. இப்பகுதிக்கு விநோபாவே வந்திருந்தார். கிராம மக்களும் ஏழைத் தீண்டாதவர்களும் பெருந்திரளாகக் கூடி விநோபாவை வரவேற்ருர்கள்.

மக்களிடம் விநோபா, "உங்கள் குறை என்ன? ஏன் கலவரமும் குழப்பமும் உண்டாக்குகிறீர்கள்?" என்று கேட்டார்.

மக்கள் அவரிடம், "பயிர் செய்ய எங்களுக்கு நிலம் வேண்டும். இது கிடைத்துவிட்டால் சண்டை சச்சரவுகள் தாமாக அடங்கிவிடும்" என்று பதில் அளித்தார்கள்.

விநோபா மீண்டும் அவர்களிடம், "உங்களுக்கு எவ்வளவு நிலம் தேவைப்படும்?" எனக் கேட்டார்.
கிழவர் ஒருவர் முன்னே வந்து, "நாங்கள் அனைவரும் உழைத்துச் சாப்பிட 80 ஏக்கர் நிலம் எங்களுக்குத் தேவைப் படுகிறது" என்று தங்கள் தேவையை வெளியிட்டார்.

விநோபா அவரிடம், "அப்படியானுல் நீங்கள் அனைவரும் சேர்ந்து இதை எழுதிக் கையொப்பம் செய்து கொடுங்கள்" என்று வேண்டிக்கொண்டார். அவர்களும் அப்படியே செய்து கொடுத்தார்கள். இவர் இந்த 80 ஏக்கர் நிலத்தையும் எப்படித் தரப் போகிருர் என்ற ஐயம் அவர்களுக்கு.

குடியான மக்களிடமிருந்து இக்கையொப்பத்தைப் பெற்றுக்கொண்ட விநோபா, கூட்டத்தில் குழுமியிருந்த நிலக்கிழார்களைப் பார்த்து, "இந்த ஏழைத் தீண்டாத மக்களுக்கு உங்களில் யாருக்கேனும் 80 ஏக்கர் நிலம் கொடுக்க முடியுமா?" என வினவினர்.

அக்கூட்டத்திலிருந்து ஒரு குரல் தொனித்தது. ஒரு மனிதர் எழுந்து நின்று, "நான் கொடுக்கிறேன் 100 ஏக்கர் நிலம்" என்று கூறினர்.

இதைக் கேட்ட, கூட்டத்தினர் வியப்படைந்தனர் "இந்த அளவுக்கு வண்மையும் கனிவும் உள்ள ஒரு நெஞ்சம் இருக்கிறதா?" என எண்ணி மகிழ்ந்தனர். அவரை வாயார வாழ்த்தினர்.

அம்மனிதரே ராமச்சந்திரரெட்டி என்னும் வண்மையாளர்.

## 26. ஈன்ஸ்டீனும் சிறுவர்களும்

கிறிஸ்துமஸ் திருநாள் சிறுவர்கள் கூட்டமாகக் கூடி ஈன்ஸ்டீன் வீட்டின் முன்னே வந்து பாடிக்கொண்டு நின்றூர்கள்.

சிறுவர்களின் குரலைக் கேட்டு ஈன்ஸ்டீன் வெளியே வந்து பார்த்தார். அவரைக் கண்டதும் சிறுவர்கள், "ஐயா, நல்ல நாள், ஏதாவது எங்களுக்குக் காசு கொடுங்கள்" என வேண்டிக் கொண்டார்கள்.

உடனே ஈன்ஸ்டீன் வீட்டினுள் சென்றூர். நகைப் பளிக்கும் விதத்தில் ஆடைகளை அணிந்துகொண்டு, கையில் ஒரு பிடிலோடு வெளியே தோன்றினர். சிறுவர்களிடம் அவர், "பிள்ளைகளே, நானும் உங்களோடு வருகிறேன். பிரியும் காசில் எனக்கும் பங்கு கொடுங்கள்" என்று சொல்லி அவர்களோடு புறப்பட்டு விட்டார்.

## 27. தியாகச் சுடர் மணி

கப்பலோட்டிய சிதம்பரனுருக்கும் சுப்பிரமணிய சிவாவுக்கும் ஆயுள் தண்டனையைக் கொடுத்தவன் 'ஆஷ்' என்ற ஆங்கிலேயன் ஆவான். இவனே நீதிபதியாக இருந்து வேண்டுமென்றே இந்தக் கொடுந்தண்டனையை அத்தேச பக்தர்களுக்கு வழங்கினுன்.

இக்கொடுந் தண்டனையைக் கேட்ட நாட்டு மக்கள் திடுக்கிட்டனர். தேசபக்தர்களும் சுதந்திர வீரர்களும் குமுறிப் பொங்கினர். வெள்ளையரின் அட்டூழிய ஆட்சியை ஒழித்தே தீர்வோம் எனத் துடித்து நின்றனர்.

இத்தண்டனை வழங்கிய கொடியவன் ஆஷ் என்பவன் செயலைப் பாராட்டி ஆங்கில அரசாங்கம் அவனுக்குக் 'கலெக்டர்' பதவியைக் கொடுத்தது. இது நம் மக்களின் மான உணர்ச்சியைக் கேலி பண்ணுவதுபோல் ஆயிற்று.

பதவி உயர்வு பெற்ற ஆஷோ தலைகால் தெரியாமல் நடந்தான். மக்களை அமர்த்தி அடக்குவதில் தனது அதிகாரத்தை நன்கு பயன்படுத்தினுன். அடக்கு முறைகள் கொண்டு வந்து தேசபக்தர்களை அலைக்கழித்துக்கொண்டிருந்தான். அவன் பெயரைக் கேட்டதுமே மக்கள் நடுங்கும் நிலையிலாயினர்.

ஒரு முறை கலெக்டர் ஆஷ் கொடைக்கானலுக்குப் புகை வண்டியில் சென்று கொண்டிருந்தான். அவ்வண்டி மணியாச்சி சந்திப்பில் நின்றது.

அந்நேரம் ஆங்கிலேயர்போல் உடையணிந்திருந்த ஒரு இந்திய இளைஞர் ஆஷ் இருந்த பெட்டியினுள் புகுந்தார். அவனுக்கு எதிரே போய் நின்று தம் கைத்துப்பாக்கியை எடுத்து அவன் நெஞ்சுக்கு நேரே நீட்டினர். அடுத்த கணம் துப்பாக்கிக் குண்டுகள் ஆஷின் நெஞ்சைத் துளைத்தன. மேலோரை வெஞ்சிறையில் வாட வைத்து, நல்லோர் இதயங்

களில் துயரத் தீயை வளர்த்த அக்கொடியோன் பிணமாகச் சாய்ந்தான்.

அந்த இளைஞன் அங்கிருந்து மின்னலென மறைந்து, பிரயாணிகள் செல்லும் அறையினுள் புகுந்தான். தனது கைத் துப்பாக்கியைத் தனது வாயினுள் புகுத்தி விசையைத் தட்டினன். அதிலிருந்து தெறித்த குண்டுகள், அவன் தலையைச் சிதற வைத்தன. இவ்வாறு அவ்விளைஞரும் தம்மையே மாய்த்துக்கொண்டார்.

அநீதத்தாலும் அட்டூழியத்தாலும் தம் தாய்நாட்டு மக்களைக் கொடுமைப்படுத்திய பாதகன், ஆஷைத் தீர்த்துக் கட்டவே துணிந்து வந்து, தனது செயலில் வெற்றி கண்டு தன்னையே மாய்த்துக்கொண்ட அந்தத் தியாகச் சுடர் மனிதன் வாஞ்சிநாதஐயர் என்ற புரட்சி வீரர்; இந்தியச் சுதந்திரப் போர் வரலாற்றில் இவர் பெயர் பொன்னெழுத் துக்களால் சுடர் வீசிக் கொண்டிருக்குமன்றோ!

## 28. சிறையில் தோன்றிய செந்தமிழ் நூற்கள்

வெள்ளையருக்கு எதிராகச் சுதேசிக் கப்பல் கம்பெனியைத் தொடங்கி வெற்றிகரமாய் நடத்திய தேசபக்தர் வ. உ. சிதம்பரனாரை ஆங்கில ஏகாதிபத்தியம் பெரும் பெரும் இன்னலுக்குட்படுத்தியது. அவர்மீது இல்லாத குற்றங்களையெல்லாம் சுமத்தி இரு ஆயுள் தண்டனைகளை விதித்தது. ஒரு மனிதனுக்கு உலக வாழ்வில் ஆயுள் ஒரு முறைதானே! இரு முறை ஆயுள் தண்டனை சிதம்பரனாருக்கு வெள்ளையர் ஆட்சி வழங்கியதென்றால் அவர் மீது எவ்வளவு வெறுப்பும் கடுப்பும் இருந்திருக்க வேண்டும்!

இக்கொடுந் தண்டனையைக் கேட்டு நாடே அதிர்ந்தது. மக்கள் உணர்ச்சியால் குமுறித் துடித்தனர். அங்கங்கே கண்டனக் கூட்டங்கள் நடைபெற்றன. பத்திரிகைகள்

அனைத்தும் ஒரு முகமாய் இக்கொடுந் தண்டனைக்கு எதிர்ப்புக் குரல் எழுப்பின. அப்போது லண்டனில் இந்திய அமைச்சராக இருந்த மார்லி பிரபு என்பவர் இவ்வநீதத் தீர்ப்பைக் கண்டித்துப் பேசினார். இதன் பலனாக அரசாங்க உயர்நீதி மன்றத்தில் இவரது வழக்கு மறுவிசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இருமுறை ஆயுள் தண்டனை; அதில் ஆறு ஆண்டுத் தண்டனையாகக் குறைக்கப்பட்டது.

சிறையில் சிதம்பரனார் பட்ட துன்பங்கள் சொல்லுந் தரமன்று. கல்லுடைத்தார்; செக்கிழுத்தார்; கனத்த துணியில் கால் சட்டையும் மேல் சட்டையும் குல்லாவும் அணிய நேர்ந்தது. நாற்றம் பிடித்த உணவை உண்டு மண் சட்டியில் நீர் குடிக்கவேண்டிய இன்னலை அனுபவித்தார். இன்னும் எத்தனை எத்தனையோ துன்பங்கள்! சிறை யதிகாரிகள் கல்நெஞ்சர்களாக இருந்து இவர்களை வாட்டி வதக்கினர்.

சிறையின் இந்தக் கொடுமைகளைத் தாங்கிக்கொள்ள இயலாத கைதிகள் பலர், கலகம் விளைவித்தனர். இதனைக் குறித்து விசாரணை ஒன்று நடந்தது. விசாரணைக் குழுவிடம் வ. உ. சி. அதிகாரிகளின் அட்டூழியங்களை அஞ்சா நெஞ்சுடன் அறிவித்தார். இதன் பயனாக அதிகாரி ஒருவர் தண்டனையும் அடைந்தார். பின்னர் கைதிகள் சற்று நன்முறையில் கவனிக்கப்பட்டனர்.

சிதம்பரனார் தாய்நாட்டு நலனுக்காகச் சிறை சென்ற போதும் அவர் தம் கடமைகளை மறக்கவில்லை. தம் தாய் மொழியாகிய தமிழ்மொழியின் நினைவு அவர் நெஞ்சத்தை விட்டு நீங்கி நின்றதில்லை. ஓய்வுப்பொழுதெல்லாம் சிறையில் தமிழ்ப் பணியே செய்து வந்தார்.

சிறையில் வைத்து இவர், "மெய்யறிவு, மெய்யறம்" என்னும் இரு நூல்களை எழுதினர். ஆங்கில நாட்டுப் பெரியார் ஜேம்ஸ் ஆலன் என்பவரின் நூல்களைத் தழுவித்

தமிழில், 'மனம்போல வாழ்வு', 'வலிமைக்கு மார்க்கம்' போன்ற நூல்களை உருவாக்கினர்.

திருக்குறளுக்கு மணக்குடவர் கண்ட உரைச் சிறப்பை அறிந்து, அதை நன்கு ஆய்ந்து தக்க திருத்தங்களோடு புதிய பதிப்பை வெயிட்டார். திருக்குறள் அறத்துப் பாலை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து நூலின் சிறப்பை வெளிநாட்டவரும் அறிந்துகொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்தினர்.

வெஞ்சிறையில் கொடுந் துன்பங்களை அனுபவித்த போதும் தம் அருமைத் தமிழை மறக்காது அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் பணியாற்றிய பெரியவர் வ. உ. சி. ஆவார்.

## 29. யாவினும் உயர்ந்தது நீதி

தளவாய் பதவி ஏற்ற பிறகு வேலுத்தம்பி தனது தாயை ஒருமுறைகூடப் பார்க்கவே இல்லை; நாட்டுப் பணியில் ஓய்வு ஒழிவின்றி ஈடுபட்டிருந்த அவனுக்கு இதற்குப் பொழுது எங்கே?

அப்போது அவனுக்குத் தென்பகுதியில் சுற்றுப் பயணம் இருந்தது. இப்பயணம் வேலுத்தம்பிக்குத் தன் தாயைப் பார்க்க வாய்ப்பாக ஆயிற்றல்லவா?

தாய்க்குலத்துக்கு அந்த மகன்தான் எவ்வளவு நாட்களுக் குப் பிறகு வந்திருக்கிறான்! தன் அன்பு மகனைக் கண்டதும் அன்னையின் விழிகள் பூரிப்பில் மலர்ந்தன. உள்ளம் இன்பத் தில் மிதந்தது. "வேலுக்குத் தனது கையால் உணவு கொடுத்து எவ்வளவு நாளாகிறது! இன்றைக்கு எப்படியும் உணவு கொடுக்கவேண்டும்" என அவள் தன்னுள் தீர் மானித்துக் கொள்கிருள் தள்ளாத வயதுடைய அந்தத் தாய்; அதற்குரிய வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்தாள்.

தாயின் கருத்தை அறிந்த வேலுத்தம்பி அதற்கு மறுப்பு சொல்லிக் கொள்ளவில்லை. அவனும் தனது தாயின் கையால் சாப்பிட்டு எவ்வளவு நாளாகிறது!

வேலுத்தம்பி உணவைச் சுவைத்து உண்டு கொண்டிருந்தான். திடீரென அவன் பார்வை மேலே சென்றது. தனது தோப்பிலுள்ள தெங்குகள் எவ்வளவு செழுமையாகக் காய்த்துள்ளன! கண்ணுக்கு அழகான காட்சிதான்!

திடீரென அவனுக்கு இன்னொரு நினைவு. கண்டெழுத்தில் (நிலபுலங்களை நேரில் பார்த்து அவற்றின் வருவாய்க்குத் தக்கவாறு வரி விதித்தல்) அது எந்த வகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளது என்பதை அறிய வேண்டும் என்ற நினைவு.

நிலபுலங்களின் வருவாயை, நேரில் பார்த்து வரி நிர்ணயிக்க அப்போது கணக்கெடுக்கப்பட்டு வந்தது. அரசாங்க ஊழியர்கள் ஒழுங்காகத் தாங்கள் கடமைகளைச் செய்திருக்கிறார்களா என்று அறிவதற்குத் தன் வீட்டுத் தென்னந்தோப்பு ஒரு கருவியாயிற்றல்லவா வேலுத்தம்பிக்கு!

உணவை உண்டுகொண்டே வேலுத்தம்பி தாயிடம், ‘‘அம்மா, நம்ம வீட்டுத் தென்னந்தோப்பை எந்த வகுப்பில் சேர்த்திருக்கிறது?’’ என்று கேட்டான்.

‘‘அதுவா மகனே, மூன்றும் வகுப்பில் சேர்த்திருக்கிறது.’’ என்று அமைதியாக பதிலளித்தாள் தாய்.

இதைக் கேட்ட வேலுத்தம்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த இலையை விட்டு உடனே எழுந்தான். அவன் கண்கள் சிவப்பேறின; மீசை துடித்தது. கோபத்தில் பற்களை நறநறவெனக் கடித்துக் கொண்டான். உக்கிரமூர்த்தியாய் வெடவெடத்துக் கொண்டு நின்றான்.

அவனது கட்டளைப்படி அரசாங்க ஊழியன் ஆளனுப்பி உடனே வரவழைக்கப்பட்டான். தளவாயிடம் அவன் தான் செய்த தவறுக்கு மன்னிப்புக் கேட்டான்.

“அறிந்து செய்த தவறுக்குத் தன்னிடம் மன்னிப்பு இல்லை” என்றான் வேலுத்தம்பி.

தாய் குறுக்கிட்டு ஊழியனை மன்னிக்க வேலுத்தம்பி யிடம் மன்றாடினாள்.

“தாயே, என் உயிரை வேண்டுமானாலும் தங்களுக்குத் தர ஆயத்தமாக இருக்கிறேன். ஆனால் இது அரசாங்க விஷயம். இதில் தலையிட உங்களுக்கோ, எனக்கோ உரிமை யில்லை. அரசாங்க ஊழியன் என்ற முறையில் நான் எனது கடமையைச் செய்தே ஆகவேண்டும். இல்லாவிட்டால் நாட்டுக்குத் துரோகம் செய்த நீசனாவேன்” என்று உறுதி தொனிக்கப் பதிலளித்தான் வேலுத்தம்பி.

அன்று நிலவியிருந்த சட்டப்படி அந்த அரசாங்க ஊழியன் தண்டிக்கப்பட்டான்.

## 30. நான்காம் சங்கம்

பாலவநந்தம் ஜமீந்தாரும் சிறந்த புலமையாளருமா யிருந்த பாண்டித்துரைத் தேவர் ஒருமுறை மதுரைக்குச் சென்றிருந்தார். அங்கு அவருக்கு ஒரு சொற்பொழிவு நிகழ்த்தவேண்டிய நிலை ஏற்பட்டது. இதற்குத் திருக் குறளும் கம்பராமாயணமும் தேவைப்பட்டன. தேவர், அந்நூற்களை விலைகொடுத்து வாங்கிவர ஆட்களை அனுப்பி வைத்தார்.

சென்றவர்கள் வெறுமையாய்த் திரும்பிவந்து, ‘எங்கும் அந்நூற்கள் கிடைக்கவில்லை’ என்ற பதிலை அளித்தார்கள்.

இச்செய்தி தேவருக்குத் தூக்கிவாரிப் போட்டதுபோல் ஆயிற்று. சங்கமிருந்து தமிழ் வளர்த்த மதுரையில் இந் நூற்கள் கிடையாது போனமை குறித்து, அவர் மிகவும் வேதனைப்பட்டார். இந்நூற்களைக் கற்கின்றவர்கள் அருகிப் போனதின் காரணமாகத்தான் இவை கிடைக்கவில்லை என்ற உண்மையை அவர் உணர்ந்தபோது அவர் உள்ளம் வெட்கித்தது. நான்காவது சங்கம் ஒன்றை மதுரையில் நிறுவி, அதன்வழி தமிழை வளம் செய்ய அவரது உள்ளம் முனைப்பு கொண்டது. அதற்கான ஆக்கப் பணிகள் உடன் தொடங்கப்பட்டன.

அடுத்து நடைபெற்ற மாகாண அரசியல் மாநாட்டின் இறுதி நிகழ்ச்சி நான்காம் சங்கத் தொடக்க விழாவாக இருந்தது. இதற்குத் தமிழ்ப் புலவர்களும் அறிஞர் பெரு மக்களும் அழைக்கப்பட்டிருந்தனர். தமிழ்ப் பெரியார்களான உ. வே. சாமிநாதய்யர், ரா. இராகவய்யங்கார், வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், மறைமலை அடிகளார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், தி. செல்வகேசவராய முதலியார், எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை போன்றவர்கள் சங்கத்தின் இன்றியமையாமை குறித்தும், தேவரவர்கள் எடுத்துக்கொண்ட அரும் முயற்சிகள் குறித்தும் விரிவுறப் பேசினார்கள். முன்னைத் தமிழ்ச் சங்கம் நிறுவிய உக்கிரப் பெருவழுதிப் பாண்டியனே இன்றையப் பாண்டித்துரைத் தேவராக மறுபிறப்பு எடுத்து வந்துள்ளார்கள் எனத் தேவருக்குப் புகழ் மாலை சூட்டினார்கள்.

இச்சங்கத்தில் சேதுபதி செந்தமிழ்க் கலாசாலை, பாண்டியன் புத்தகசாலை, நூலாராய்ச்சிசாலை ஆகிய பிரிவுகளும் அப்போதே தொடங்கப்பட்டன.

பின்னர் தேவரின் பொருளுதவியால் பழைய இலக்கண இலக்கிய நூற்களும், சைவத் திருமுறை நூற்களும் பதிப்பிக்கப்பட்டு வெளி வந்தன.

## 31. கடமையைப் பாராட்டியவர்

சிறந்த மேதையும் கூரிய மதியாளருமாகிய சி. பி. இராம சுவாமி ஐயர் ஒரு நாள் துரிதகதியில் மத்திரி சபைக் கூட்டத் திற்குப் போய்க்கொண்டிருந்தார்.

வெள்ளைக்கார போலீஸ் அதிகாரி ஒருவன், இவரது மோட்டார் வண்டியை நிறுத்தி, ''இராணுவப் பயிற்சி நடந்து கொண்டிருக்கிறது. அதனால் எந்த வண்டியும் இந்த வழி யாகச் செல்லக்கூடாது. எனவே திரும்பி வேறு வழியாகச் செல்லுங்கள்'' எனக் கூறினான்.

சி. பி. அவனிடம், ''என் வண்டியை மறிக்காதே. நான் யார் தெரியுமா?'' என்று கேட்டார்.

பதிலாக அவன், ''நன்றாகத் தெரியும். நீங்கள் சட்டசபை உறுப்பினர். யாராக இருந்தாலும் என் மேலதிகாரிகளின் கட்டளையை நான் நிறைவேற்றியே ஆக வேண்டும்'' எனப் பதிலுரைத்தான்.

சி. பி. தமது மோட்டார் வண்டியை வேறு வழியாக ஓட்டிச் செல்லக் கூறினார். அலுவலகம் போய்ச் சேர்ந்ததும் அவர் முதல் வேலையாகத் தலைமைப் போலீஸ் அதிகாரியை அழைத்துவரச் செய்தார். அவரிடம் சி. பி. தம் வழியை மறித்த அந்தப் போலீஸ் அதிகாரியின் கடமையுணர்ச்சியைத் தெரிவித்து அவனுக்குப் பரிசளிக்கக் கட்டளையிட்டார்.

## 32. பாம்பினைப் பற்றிய சிறுவன்

அந்தச் சிறுவன் தனது இளம் பருவத்திலேயே சுறுசுறுப் பும் அச்சமற்ற நெஞ்சமும் கொண்டிருந்தான். தனது தோழர்களோடு உல்லாசமாகப் பொழுது போக்குவதில் இவனுக்கு மிகவும் விருப்பம்.

ஒருமுறை பாம்பாட்டி ஒருவன் பாம்பினைக் கொண்டு வந்து விளையாட்டுக் காட்டிக்கொண்டிருந்தான்; சிறுவனும் அவனது தோழர்களும் இந்த விளையாட்டைப் பார்த்துக் களித்துக் கொண்டிருந்தார்கள்.

"என்ன அழகான பாம்பு இது! எவ்வளவு நீளம் எப்படி வளைந்து நெளிந்து ஆடுகிறது! இதன்மீது படிந்துள்ள நிறங்கள்தான் எவ்வளவு கவர்ச்சி!" இவ்வாறெல்லாம் பாம் பினைப் பற்றிச் சிறுவன் எண்ணியெண்ணி வியப்புற்றான்.

அப்பாம்பைத் தன் கையில் பற்றிப் பிடித்து விளையாட வேண்டுமென்ற ஆசை அச்சிறுவனுக்கு. இந்த எண்ணம் அவனிடம் நாளுக்கு நாள் முறுகி வளர்ந்தது.

சில நாட்களின் பின்னர் அப்பாம்பட்டி மீண்டும் அப் பாம்பை விளையாட்டுக் காட்டிக்கொண்டு வந்திருந்தான். இதைப் பார்த்த சிறுவன் அவன் அருகே சென்று, வெடுக் கென அப்பாம்பைப் பற்றிப் பிடித்துத் தன் கையில் வைத்துக் கொண்டான்.

பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்கள் இதைக் கண்டு திடுக்கிட்டனர். "இச்சிறுவனுக்கு அச்சம் என்பதே இல்லையா? அல்லது தன் உயிரைப் பற்றியே சிந்தனை இல்லையா?" என அவர்கள் நினைத்தனர்.

நல்ல காலமாக அப்பாம்பு சிறுவனை எதுவும் செய்ய வில்லை. சற்று நேரம் அவன் பாம்பைக் கையில் வைத்துக் கொண்டு பின்னர் விட்டு விட்டான்.

இச்சிறுவன் யார் தெரியுமா? தமிழ்ப் பெரியார் திரு. வி. க. தான். அவரது சின்னஞ்சிறு பருவத்திலுள்ள நிகழ்ச்சியே இது.

## 33. தீயினுக்குத் தப்பிய நவீனம்

எரிச் மரியா ரிமார்க் என்பவர் ஜெர்மன் எழுத்தாளர். தொடக்கத்தில் இவர் சமையல் கலை சம்பந்தமாகத் தொடர்ச்சியாய் பத்திரிகையில் எழுதி வந்தார். நவீனம் ஒன்று எழுதவேண்டும் என்ற ஆர்வம் இவருக்குண்டாயிற்று. எனவே இம்முயற்சியில் அவர் ஈடுபட்டார்.

முதல் உலகப் போரை மையமாக வைத்து இவர் ஒரு நவீனத்தை உருவாக்கினர். இதைக் கொண்டுபோய் ஒரு பதிப்பாளரிடம் கொடுத்து வெளியிட வேண்டிக்கொண்டார். அவர் இதைப் படித்துப் பார்க்காமலேயே திருப்பிக் கொடுத்து விட்டார்.

சோர்வு கொண்ட எரிச் மரியா, எழுத்தில் சலிப் படைந்து, அக் கையெழுத்துப்பிரதியை அப்படியே அடுப்பில் தூக்கிப் போட்டு விட்டார்.

மரியாவின் மனைவி இதைக் கண்டு திடுக்கிட்டவராய், நெருப்பு அதில் பற்றுவதற்கு முன் அதை எடுத்துக் கொண் டார். பின்னர் அவள் அதே பதிப்பாளரிடம் அந்நவீனத் தைக் கொண்டுபோய்க் கொடுத்து அதை நிதானமாகப் படித்துப் பார்க்கும்படி கேட்டுக்கொண்டாள்.

பதிப்பாளர் அந்நவீனத்தைப் பிரித்துப் படித்துப் பார்த் தார். அது அவரது உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. 'என்ன அற்புதமான படைப்பு!" என அதைப் பன்முறை பாராட்டிக் கொண்டார். அந்நவீனத்தை உடனே வெளியிடவும் ஏற் பாடு செய்தார். இந் நவீனம் நாற்பது இலட்சம் பிரதிகள் செலவாயின. அந் நவீனமே 'மேற்குப் போர் முனையில் நிறைந்த அமைதி' என்பது.

## 34. பெர்னுர்ட்ஷாவின் பதில்

ஒரு பெண் தனது நாய்க்கு 'பெர்னுர்ட்ஷா' என்ற பெயரை இட விரும்பி அவருக்குக் கடிதம் எழுதினுள்.

அவரிடமிருந்து அதற்குப் பதில் வந்தது. அப்பதிலில் அவர், "அம்மையே, அப்படிப் பெயர் வைப்பதில் எனக்கு மகிழ்ச்சிதான். இதற்கு ஏதேனும் மறுப்புண்டா? என்று உங்கள் நாயிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று குறிப்பிட்டிருந்தார்.

## 35. இந்தியாவின் சொத்து

காரைக்குடி சிராவயல் என்னும் கிராமத்தில் தோழர் ஜீவானந்தம் 'காந்தி ஆசிரமம்' என்ற பெயரில் ஒரு நிறுவனம் நடத்தி வந்தார். அனைவரும் பாராட்டும் முறையில் இதன் பணிகளும் செயல் முறைகளும் இருந்தன.

ஒருமுறை காந்தியடிகள் இலங்கைக்குச் செல்லும் வழியில் காரைக்குடிக்கு வந்திருந்தார். ஜீவாவும் ஏனைய காந்தி ஆசிரம ஊழியர்களும் காந்தியடிகளை வரவேற்று ஆசிரமத்துக்கு அழைத்து வந்தார்கள்.

காந்தியடிகள் ஆசிரமத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு, அது ஆற்றிவரும் தொண்டுகளையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

ஆசிரமத்தைக் குறித்து காந்தியடிகளுக்கு நல்லெண்ணம் ஏற்பட்டது. ஜீவாவின் பணிகளை அவர் பாராட்டினுர். பின்னர் அடிகள் ஜீவாவிடம், "உங்களுக்கு ஏதாவது சொத்து இருக்கிறதா?" எனக் கேட்டார்.

' இந்தியாதான் எங்களுக்குச் சொத்து'' என்று பதிலளித்தார் ஜீவா.

அடிகள் உடனே, ''இல்லை, நீங்கள்தான் இந்தியாவின் சொத்து'' என்று திருப்பிக் கூறினர்.

## 36. கவிஞனின் மதிப்பீடு

தைமூர் என்ற அரசன் கொடுந்தன்மை நிறைந்தவன். பல நாடுகளை இவன் வெற்றி கண்டான். அந்நாட்டு மக்களில் பெரும் பகுதியினரைக் கொன்று குவித்தான். இவன் நெஞ்சத்தில் ஒரு சிறிதளவேனும் இரக்கம் இருந்ததில்லை. எப்போதும் கடுகடுத்துச் சினம் பொங்கும் முகத்தோடு இவன் காணப்படுவான்.

ஆடம்பரப் பொருள்கள் இவனுக்கு மிகவும் பிடித்த மானவை. முத்துக்களும் மாணிக்க மணிகளும் இவனது மேனிக்குப் பகட்டைக் கொடுத்தன. தங்கக் கலசங்களில் திராட்சை ரசம் நிறைந்திருக்கும். இது ராஜ விருந்துகளில் பரிமாறப்படும்.

ஒருநாள் தைமூர் அரியணையில் அமர்ந்திருந்தான். அவன் அருகே உறவினர்களும் அரசர்களும் சிற்றரசர்களும் தளபதிகளும் இருக்கை கொண்டிருந்தார்கள். இசைவாணர் கள் ஒரு பக்கம் ஒதுங்கியிருந்தார்கள். இவர்கள் பக்கமாகக் கவிஞர் கிர்மானியும் இருந்தான்.

தைமூர் கவிஞன் கிர்மானியிடம் பேச விரும்பினன். ஏனெனில் கேட்கும் கேள்விகளுக்கும் அவன் கொடுக்கும் பதில்களே சுவை மிகுந்தனவாக இருக்கும். மேலும் அவன் உண்மையைச் சொல்லத் தயக்கமே கொள்வதில்லை. இது தைமூருக்கு மிகவும் பிடித்திருந்தது.

''கிர்மானி'' என அழைத்தான் தைமூர்.

கவிஞன், அரசன் தைமூரை ஏறிட்டுப் பார்த்தான்.

''என்னை நான் விற்பதானல் நீ என்ன விலை கொடுப் பாய்?'' என்று கேட்டான் தைமூர்.

“இருபதைந்து அஸ்கர்கள் தருவேன்” என்று பதில் அளித்தான் அஞ்சா நெஞ்சம் பெற்ற கிர்மானி.

“என் இடுப்பில் அணிந்துள்ள கச்சைக்கே அந்த விலை யாகுமே!” என்று வியப்புடன் கேட்டான் தைமூர்.

“அதற்குத்தான் அந்த விலை மதிப்பு. தங்கள் விலை ஒரு செப்பு நாணயங்கூடப் பெருது” என்று கூறினுன் உண்மை யின் நண்பனுன கிர்மானி.

## 37. அச்சம் அறியாதவர்

சம்பரானிலுள்ள அவுரித் தோட்டத் தொழிலாளர்கள் தங்கள் உரிமையைக் கோரிப் போராட்டம் நடத்திக் கொண் டிருந்தார்கள். தொழிலாளர்களுக்கு எதிராய் பல அநீதங் களும் அட்டூழியங்களும் நடந்தன.

காந்தியடிகள் சம்பரானுக்கு வந்து இதை விசாரணை நடத்தினுர். விசாரணையால் மக்கள் விழிப்படைந்தார்கள். தொழிலாளர்கள் எழுச்சி பெற்றனர். அவர்கள் துன்பத் துக்குக் காரணமாக இருந்த வெள்ளையன் நீலியின் நிலை நெருக்கடியாயிற்று.

சம்பரானில் தங்கியிருந்த காந்தியடிகளிடம் யாரோ ஒருவர் வந்து, “இந்தக் கொடியவன் நீலி, உங்களை கொல் வதற்கு ஆட்களை அமர்த்தி வைத்திருக்கிருன்” எனக் கூறினர்.

இதைக் கேட்ட அடிகள் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. செய்தியைத் தெரிவித்தவரிடம் அவர் ஒன்றுமே பதில் சொல்லிக் கொள்ளவில்லை.

ஒருநாள் இரவு காந்தியடிகள் யாருக்கும் தெரியாமல் தனியாக வெள்ளைக்காரன் நீலியின் பங்களாவுக்குச்

சென்ருர். அவன் அருகே போய் நின்று, ''நீங்கள் என்னைக் கொல்ல ஆட்களை அமர்த்தியிருப்பதாக அறிந்தேன். எனவே யாரிடமும் தெரிவிக்காமல் தனியாக இங்கே வந்திருக்கிறேன்'' என்று கூறினர்.

அந்த வெள்ளையன் நீலி திகைப்புற்று அப்படியே கல்லாய்ச் சமைந்து நின்ருன்.

## 38. கலைவாணர் அளித்த பரிசு

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்கள் சகோதரர் திருமணத்தின்போது எம். கே. தியாகராஜபாகவதரின் கச்சேரி நடைபெற்றது. கச்சேரி முடிந்த பின் அதில் பங்கு கொண்ட கலைஞர்களுக்கெல்லாம் கலைவாணர் பரிசுகள் வழங்கினர்.

கடம் இசைக் கருவியை வாசித்த கலைஞருக்கு ஒரு பெரிய வெள்ளிக் கோப்பையைப் பரிசாக வழங்கினர். ஏனைய கலைஞர்களுக்கு அளவில் சிறிய பரிசுகளைக் கொடுத்துவிட்டு, இவருக்கு மட்டும் இவ்வளவு பெரிய பரிசைக் கொடுக்க என்ன காரணம் எனத் தெரியாது மக்கள் ஆலோசித்துக் கொண்டிருந்தனர்.

இதைப் புரிந்துகொண்ட கலைவாணர் இதற்குப் பதிலளிக்கலானர்: ''கடம் வித்துவானுக்கு இவ்வளவு பெரிய பரிசு கொடுக்க என்ன காரணம் எனப் பலர் நினைக்கலாம்; காரணம் உண்டு. இப்போது ரயிலிலுள்ள ஜன நெருக்கமும் கூட்டமும் எல்லோருக்கும் தெரிஞ்சதுதான். இவ்வளவு பெரிய மண் பானையை ரயிலில் நெடுந் தொலைவிலிருந்து பாதுகாப்பாகக் கொண்டு வருவது லேசான காரியமா, என்ன? நெனச்சுப் பாருங்கோ, அந்த அரிய காரியத்தைச் செய்தவருக்கு இவ்வளவு பெரிய பரிசைக் கொடுத்தது

சரிதானே!'' என்று கலைவாணர் கொடுத்த விளக்கத்தைக் கேட்டு மக்கள் கூட்டம் வயிறு குலுங்கச் சிரித்தது.

## 39. பிறப்புரிமையே சுதந்திரம்

சென்னை நகரில் 'ஹோம் ரூல்' இயக்கத்தின் முதல் கூட்டம் நடக்க இருந்தது. இதன் அமைப்பாளரான அன்னிபெசண்டு அம்மையார், முதியவரான தாதாபாய் நௌரோஜியிடமிருந்து, இக்கூட்டத்திற்கு ஒரு வாழ்த்துச் செய்தி பெற விரும்பினார். இதற்காக அவர் ஜமுனாதாஸை நௌரோஜியிடம் அனுப்பி வைத்தார்.

நௌரோஜி வாழ்த்துச் செய்தி எதுவும் கொடுக்கவில்லை.

ஜமுனாதாஸ் அவரிடம், பேசிக்கொண்டிருக்கும்போது, ''ஆங்கிலேயர்கள் இந்தியாவுக்குச் சுதந்திரம் கொடுப்பார்களா?'' என்ற வினாவை எழுப்பினார்.

இதைக் கேட்டதும் நௌரோஜிக்கு ஆத்திர உணர்ச்சி பொங்கிவிட்டது. அவர் ஜமுனாதாஸிடம், ''இந்தியாவுக்குச் சுதந்திரம் ஆங்கிலேயர் கொடுக்கும் ஒன்றல்ல. நாமே எடுத்துக்கொள்ள வேண்டிய ஒன்று தான்'' என்று கூறினார்.

பின்னர் புன்முறுவல் இழைத்தபடியே ஜமுனாதாஸிடம் ''சென்னைக் கூட்டத்துக்கு இதையே என் செய்தியாக எடுத்துக்கொள்'' என்று கூறினார்.

## 40. இராமகிருஷ்ணரும் விவேகானந்தரும்

இராமகிருஷ்ணர் தம் சீடரான விவேகானந்தரிடம் ஒரு நாள் ஒரு கேள்வியைப் போட்டார்.

"நீ ஒரு ஈயின் உருவத்தைப் பெற்றிருக்கிறாய் என்று வைத்துக் கொள்; உன் எதிரே அமுதம் நிறைந்த ஒரு கோப்பை இருக்கிறது. அப்போது நீ என்ன செய்வாய்?" இதுவே அக்கேள்வி.

விவேகானந்தர் பதிலாக, "நான் அக்கோப்பை விளிம்பில் கவனமாக இருந்துகொண்டு அதிலுள்ள அமுதத்தைப் பருகுவேன். உள்ளே குதித்து வீழ்ந்து மடிந்து போகமாட்டேன்" எனக் கூறினர்.

இதைக் கேட்ட இராமகிருஷ்ணர், "அமுதந்தான் சாகாமையைக் கொடுப்பதாயிற்றே! நீ அதில் வீழ்ந்து மூழ்கினலும் உனக்குச் சாவு வராதே" என்று பதிலளித்தார்.

## 41. நெருக்கடித் திருமணம்

அலெக்சாண்டர் டூமாஸ் என்பவன் புகழ்மிக்க பிரஞ்சு எழுத்தாளன். இவன் நாடகங்கள் எழுதுவதிலும் வரலாற்றுப் புதினங்கள் புனைவதிலும் மேம்பட்டு விளங்கினன். பிரஞ்சு நாட்டுக் கேளிக்கைகளையும் அகம்பாவ வெறியாட்டங்களையும் தன் படைப்புக்களில் இவன் படம் பிடித்துக் காட்டியிருக்கிறன். தனது வாழ்வில் ஏறக்குறைய ஆயிரத்தி இருநூறு நூற்கள் எழுதி வெற்றி கண்டவன் டூமாஸ்.

இவனை ஒரு செல்வச் சீமாட்டி காதலித்து வந்தாள். ஆனல் டூமாஸுக்கோ அவள்மீது காதல் பிறக்கவில்லை. எனவே இவன் அவள் காதலைப் புறக்கணித்து விட்டான். ஆனல் அவளோ எப்படியும் அவனை மணம் செய்துகொள்ள வேண்டுமென்று வேட்கை கொண்டிருந்தாள்.

டூமாஸ் பெரும் கடன்காரனகி சிறைக்குப் போகும் நிலையிலிருந்தான். அப்பெண் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தாள்.

டுமாஸின் கடன் பத்திரங்கள் அனைத்தையும் தானே பணம் கொடுத்து வாங்கினாள். பின்னர் டுமாஸிடம் அவள் வந்து, "நீ என்னை மணந்து கொள். இல்லாவிட்டால் சிறைக்கு நீ போக வேண்டியதுதான்" என்று அச்சுறுத்தினாள்.

டுமாஸ் என்ன செய்வான்? அவன் நிலைமை நெருக்கடியாயிற்று. ஒன்று அப்பெண்ணை மணம் செய்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் சிறைக்குச் செல்ல வேண்டும்.

அவன் சிந்தனை செய்தான். அவனும் உலகில் வாழ வேண்டுமல்லவா? சிறைக்குச் செல்வதைவிட அவளைத் திருமணம் செய்து கொள்வதே சிறந்தது என்னும் முடிவுக்கு வந்து அவளை மணந்து கொண்டான்.

## 42. கடமையில் கருத்து

இரும்பு மனிதர் என அழைக்கப்பட்டு வந்த சர்தார் வல்லபாய் படேல் கடமையை நிறைவேற்றுவதில் உறுதி கொண்டவர். எவ்வித இடையூறுகள் குறுக்கிடினும் செய்ய வேண்டியதை அவ்வப்போது செய்துவிடுவார். இதற்கு அவரது வாழ்வில் எத்தனையோ நிகழ்ச்சிகள் உண்டு.

படேல் வழக்கறிஞராகத் தொழில் பார்த்து வந்த காலம். நீதிமன்றத்தில் அவர் ஒரு வழக்கை நடத்திக் கொண்டிருந்தார். அந்நேரம் தந்திச் சேவகன் ஒருவன் அங்கே வந்து, அவரிடம் ஒரு தந்தியைக் கொடுத்தான். அதைப் பிரித்துப் படித்துவிட்டு மீண்டும் வழக்கைத் தொடர்ந்து நடத்தினார்.

படேலின் நண்பர்களும், ஏனையவர்களும் அத் தந்தியைப் பார்த்துத் திகில் கொண்டார்கள். அது

ஏதேனும் ஒரு துயர நிகழ்ச்சியை அறிவிக்கும் செய்தியாகவே இருக்க வேண்டும் என்பது அவர்கள் ஊகம், ஏனெனில் அக்காலம் பெரும்பாலும் துயரச் சம்பவங்களை அறிவிக்கவே மக்கள் தந்தியைப் பயன்படுத்தி வந்தனர்.

தந்தியைப் பிரித்துப் பார்த்த படேலின் முகத்தில் எவ்வித மாறுதலும் தென்படவில்லை. அவர் வழக்கை நடத்துவதிலேயே உன்னிப்பாக இருந்தார்.

வழக்கு முடிந்த பின்னர் நண்பர்கள் படேலிடம் வந்து தந்தியைப் பற்றி விசாரித்தார்கள். மருத்துவமனையிலிருந்த தமது மனைவி காலமான செய்தியை படேல் அவர்களிடம் அறிவித்தார்.

இச் செய்தி கேட்ட நண்பர்கள் திகைப்பும் வியப்பும் கொண்டனர். தம் மனைவி இறந்த செய்தி அறிந்ததும் தன் துயரத்தையெல்லாம் ஒரு பக்கம் மறைத்துக்கொண்டு, மற்றவர்களுக்காகத் தாம் ஏற்றுக்கொண்ட பொறுப்பை நிறைவேற்றிய அக்கடமை வீரரை அவர்கள் வாயார வாழ்த்திப் போற்றினர்.

## 43. தாயின் நினைவு

ஆண்ட்ரு கார்னிகி என்பவர் ஸ்காட்லாந்து தேசத்தினர்; பெற்றோர்களுடன் தம் இளம் பருவத்தில் அமெரிக்காவில் வந்து குடியேறியவர். தம் உழைப்பினால் செல்வம் குவித்து, குபேரன் ஆனார். சம்பாதித்த பொருளில் பெரும் பகுதியையும் இவர் பொது நலனுக்காகச் செலவிட்டார். தம் பெற்றோர்களிடம் இவர் கொண்டிருந்த அன்போ எல்லையற்று விளங்கியது.

இவர் ஒருமுறை தம் நண்பர் ஒருவருடன் வீதி வழியாகச் சென்று கொண்டிருந்தார். வழியில் பெண்

ஒருத்தி, இவரது நண்பரைத்தனியாக அழைத்து என்னவோ பேசிக் கொண்டிருந்தாள்.

அவள் பேச்சைக் கேட்கத் திரும்பி வந்த நண்பரிடம் கார்னீகி, ''அந்தப் பெண்மணி உங்களிடம் என்ன பேசிக் கொண்டிருந்தாள்?'' என வினவினார்.

கார்னீகியிடம் நண்பர், ''அவள் வீடு ஈட்டில் இருக்கிற தாம். அதை மீட்டுத்தர உங்களிடம் சொல்லச் சொன்னாள். உங்களால் அது முடியாது என நான் இதமாகப் பதிலளித்து விட்டேன்'' என்று தெரிவித்தார்.

இதைக் கேட்ட கார்னீகி அந்நண்பரிடம், ''நீங்கள் உடனேயே போய் நாளை நான் அதைத் திருப்பிக் கொடுப்ப தாக அவளிடம் சொல்லிவிட்டு வாருங்கள்'' என்று கூறினார்.

கார்னீகியின் மொழிகள் நண்பருக்கு வியப்பை அளித்தன. அவர் கார்னீகியிடம், ''இத்தகைய விண்ணப் பங்கள்தான் நாள்தோறும் உங்களுக்கு ஆயிரக்கணக்காக வந்து கொண்டிருக்கின்றனவே! இவருக்கு மட்டும் ஆதரவளிக்க ஏனோ நீங்கள் முனைந்து நிற்கிறீர்கள்? இப் படியே செய்துகொண்டிருந்தால் இறுதியில் உங்கள் செல்வம் என்ன ஆகும்?'' என்று கேட்டார்.

''சரி, அவளிடம் இதை நீங்கள் சொல்லிவிட்டு வாருங்கள். அவளுக்கு நான் உதவி செய்தே ஆகவேண்டும். ஏன் தெரியுமா? அவள் என் தாயைப் போலவே இருக் கிறாள்!'' என்று கார்னீகி தாம் உதவ நின்றதின் காரணத்தை உரைத்தார்.

## 44. விடுதலை வீரர்கள்

இந்தியாவுக்கு அரசியல் சீர்திருத்தம் வழங்க 'சைமன் கமிஷன்' என்ற பெயரில் ஒரு குழு லாகூருக்கு வந்திருந்தது.

இக் குழுவைக் குறித்து நாட்டு மக்களுக்கு நல்லெண்ணம் இல்லை. எனவே நாடு முழுவதும் இதற்கு எதிர்ப்பு காட்டியது. "சைமன் கமிஷனே, திரும்பிப் போ" என்ற குரலே எங்கும் முழங்கிற்று. அணியணியாகத் தாய் நாட்டு வீரர்கள் கருப்புக் கொடிகளை கையிலேந்தி ஊர்வலம் வந்தனர்.

லாகூரில் தேசப் பெருந்தலைவர் லாலா லஜபதிராய் தலைமையில் எதிர்ப்பு ஊர்வலம் சென்று கொண்டிருந்தது. அரசாங்கச் சேவகர்கள் குண்டாந் தடிகளைக் கொண்டு வீரர்கள் அணியைத் தாக்கினர். லாலா லஜபதிராயின் நெஞ்சில் பலமான ஓர் அடி வீழ்ந்தது. அதில் இவர் தடுமாறி வீழ்ந்தார். அன்றிலிருந்து படுக்கை. பத்தொன்பதாம் நாள் அவர் ஆவி பிரிந்தது.

இக்கொடுஞ்செயல் நாட்டு மக்கள் உள்ளங்களில் பெருங் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. இந்த அட்டூழியத்துக்குக் காரணமாக இருந்த போலீஸ் அதிகாரிகள், சாண்டர்ஸன், சந்தன்சிங் ஆகிய இருவருமாவர். விடுதலை வீரர்களுக்கு இக் கொடியவர்கள்மீது அடங்காச் சினம் பொங்கியது. அதன் பலன் இருவரும் புரட்சி வீரர்களின் துப்பாக்கிக் குண்டு களுக்கு இரையாயினர். இவர்களைச் சுட்டுக் கொன்ற வர்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் அரசாங்கம் மும்முர மாக ஈடுபட்டிருந்தது.

மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சி நடந்த சில நாட்களில் டில்லி சட்டமன்றத்தில் குண்டுகள் வெடித்தன. சட்டமன்றக் கட்டிடமே இதில் கிடுகிடுத்தது. உறுப்பினர்கள் உயிருக்குப் பயந்து ஓடலாயினர். ஏனையவர் நடுநடுங்கிக் கொண்டிருந் தனர்.

இரு இளம் வீரர்கள் அங்கே தென்பட்டனர். அவர்கள் சட்டமன்றத்தில் இருந்தவர்களைப் பார்த்து, "இந்தியாவுக்கு உடனே விடுதலை கொடுங்கள், காலத்தை நீட்டிக் கொண்டு

போனால் இதுபோன்ற பல நிகழ்ச்சிகள் இனி நாடெங்கிலும் நடக்கும். இது அதற்கோர் முன் அறிவிப்பு. இதற்காக நாங்கள் தூக்குமேடை செல்லவும் அஞ்சவில்லை. எங்களைக் கைது செய்ய விரும்பினால் இதோ செய்து கொள்ளுங்கள்" என்று சொல்லி அவர்கள் தங்கள் கைகளை முன்னே நீட்டினர். அந்த இளம் வீரர்கள் உடனே கைது செய்யப் பட்டனர்.

வழக்கில் அவர்களுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப் பட்டது. இவ்விளம் வீரர்களே பகத்சிங், தத்து என் பவர்கள்.

இந்நேரம் சாண்டர்ஸ்ன், சந்தன்சிங் இவர்களைச் சுட்டுக் கொன்றவர்கள் கண்டுபிடிக்கப்பட்டனர். அவர்களில் முக்கிய எதிரிகளாக இருந்தவர்கள் ஐந்து பேர். அதில் முதலாவதாக நின்றவர் பகத்சிங்.

வழக்கு நடந்தது. இதன் முடிவு பகத்சிங், சுகதேவ், ராஜகுரு ஆகியவர்களைத் தூக்கிலிட வேண்டுமென்று தீர்ப்பாயிற்று.

வீரர்கள் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவிக் கொண் டார்கள். "தியாகிகள் சென்ற விண்ணுலகுக்கு நாங்களும் செல்கிறோம். ஆனால் இந்த வெள்ளையர் ஆட்சியை ஒழித்துக் கட்ட மீண்டும் இந்தப் பாரத மண்ணிலேயே பிறப்போம். பிறந்து எங்கள் குறிக்கோளை நிறைவேற்று வோம்" என்று இறுதியாக முழக்கமிட்ட அவ்வீரர்களின் வெற்றுடல்கள் பின்னர் கயிற்றில் தொங்கின. நாட்டு மக்கள் கண்ணீர் சொரிந்தனர்.

மறைந்த அவர்களின் வீர உணர்ச்சியும் நாட்டுப் பற்றும், தியாகப் பண்பும் கோடிக் கோடி இளைஞர் உள்ளங்களிலெ புத்துணர்வையும் புதிய எழுச்சியையும் தோற்றுவித்தன. அதன் பலனாய் பாரதப் பொன்னாடு சுதந்திரம் பெற்றது.

## 45. சாதூரியப் பதில்

இது இந்திய நாடு சுதந்திரம் பெறுவதற்கு முன்னுள்ள நிகழ்ச்சி.

ஆங்கில அரசாங்கத்தின் அடக்குமுறைச் சட்டங்களை நீக்க வேண்டும் எனக் காங்கிரஸ் கட்சி கொண்டுவந்த தீர்மானத்தை விளக்கித் தலைவர் சத்தியமூர்த்தி பேசிக் கொண்டிருந்தார். ஒரு சமயம் ஆங்கில அரசாங்க செயற் குழுவிலுள்ள இந்த உறுப்பினர்களையும் தாக்கிப் பேசலானார்.

“பதவியில் வந்தால் நீங்களும் மாறித்தான் போவீர் கள்” என்றார் செயற்குழு உறுப்பினரான என். என். சர்க்கார்.

பதிலாக சத்தியமூர்த்தி, “அப்படி மாறாமலிருக்க நீங்கள் உதாரணமாக இருக்கிறீர்களே” என்றார்.

இந்நேரம் அவைத் தலைவர் குறிக்கிட்டு, “தனிப்பட்ட முறையில் தாக்குவது இங்கே மிகுந்து வருகிறது” என்று எச்சரிக்கை செய்தார்.

என். என். சர்க்கார் உடனே, “தாக்கட்டும், தாக்கட்டும். அவர் தாக்குவதை நான் பொருட்படுத்தவே இல்லை” என்றார்.

உடனே சத்தியமூர்த்தி “அப்படியானால் நான் பேச்சை நிறுத்திக் கொள்கிறேன். அவர் கொஞ்சம் சூடுள்ளவர் என்றுதான் இவ்வளவு நேரமும் பேசினேன். அது இல்லை யென்றால் நான் பேசி என்ன பயன்?” என்று பதிலளித்தார்.

## 46. சபாஷ், பேஷையா

தசாவதானி ஆறுமுகம் பிள்ளை என்பவரின் அவதான நிகழ்ச்சி ஒருமுறை திருவனந்தபுரத்தில் நடைபெற்றது. நீதிபதி சேஷையர் இதற்குத் தலைமை தாங்கினர். அறிஞர்கள் பலர் இதில் கலந்துகொண்டார்கள்.

கேள்வியாளர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் அவதானியார் தட்டுத் தடங்கலின்றிப் பதிலளித்து வந்தார். இவரது புலமைத் திறனும் நினைவாற்றலும் அவையிலிருந்தோரை மெய்சிலிர்க்க வைத்தன. தலைமை வகித்த நீதிபதி சேஷையர், அவதானியார் அளிக்கும் சரியான பதில்களைக் கேட்டு அவ்வப்போது, "சபாஷ், பேஷ், பேஷ்" என்று சொல்லிக்கொண்டே வந்தார்.

அந்த அவையில் கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளையும் அமர்ந்திருந்தார். உள்ளப் பூரிப்பில் மிதந்துகொண்டிருந்த தலைவர் சேஷையர், 'அவதான நிகழ்ச்சியைக் குறித்துக் கவிமணியின் கருத்தை அறியும் நோக்கமுடன், "தேசிக விநாயகம் பிள்ளையவர்களே, அவதானம் எப்படி?" என்று வினவினர்.

உடன் தானே கவிமணி, "சேஷையர் மெச்சி, சபாஷ் பேஷையா என்ற பிறகு நான் சொல்ல என்ன இருக்கிறது" என்ற பொருளைத் தருகின்ற,

> "ஆறுமுகம் பிள்ளை அவதானம் கண்டெளியேன்
> வேறு முகமன் கூறவேண்டுமோ?—தேறுமதி
> சேஷையா மெச்சித் திருவாய் மலர்ந்து சபாஷ்
> பேஷையா என்ற பிறகு"

என்ற பாடலைப் பாடினர். அவையிலிருந்தவர்கள் கவிமணியின் அவதானம் போன்ற இந்தப் பாடலைக் கேட்டு வியப்படைந்தார்கள்.

## 47. முதல் விமானம்

ஆர்வில்ரைட் என்பவரே முதலில் வானத்தில் பறப்பதற்கு வழி கண்டு பிடித்தவர். இவரது சின்னஞ்சிறு பருவத்திய வாழ்வு வறுமை நிறைந்தது. இவர் சிறுவனாக இருந்தபோது தெருவில் கிடக்கும் துருப்பிடித்த இரும்புகளையும் எலும்புத் துண்டுகளையும் பொறுக்கி விற்று வாழ்வை நடத்தி வந்தவர். அதன் பின்னர் எத்தனையோ தொழில்கள் தொடங்கினர். அத்தனையிலும் தோல்வியே தான்.

ஒருநாள் இவர் நூல்நிலையம் ஒன்றுக்குச் சென்றிருந்தார். அங்கே இவர் படித்துக்கொண்டிருந்த புத்தகத்தில் ஒரு சுவையான கதை இருந்தது. அதில், ஒரு மனிதன் தனக்கு இறக்கைகள் எதுவுமின்றிக் காற்றுடி போன்ற ஒன்றின் துணையால் வானத்தில் பறந்து சென்றதாக வர்ணிக்கப் பட்டிருந்தது.

இதைப் படித்ததும் ரைட்டின் உள்ளத்திலும் மனிதன் ஏன் வானத்தில் பறக்கக்கூடாது? என்ற கேள்விக்குறி எழுந்தது. இதைக் குறித்துத் தம் சகோதரருடன் ஆலோசனையில் ஈடுபட்டார்.

ஆலோசனை ஆராய்ச்சி ஆனது. பல சோதனைகளைச் சகோதரர் இருவரும் செய்து பார்த்தனர். முடிவில் பறப்பதற்கு ஒரு இயந்திரத்தைக் கண்டு பிடித்தார். இந்த இயந்திரத்தின் உதவியில் ரைட் 1903ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 17ஆம் நாள் வானத்தில் பறக்கலானர். இதுவே முதன் முதலில் பறந்த விமானமாகும்.

## 48. சிறுமியின் கடிதம்

அந்தச் சிறுமியின் பெயர் கிரேஸ் பெடல்; இவருக்கு வயது பதினொன்றே ஆகியிருந்தது. நியூயார்க்கைச் சேர்ந்த 'வெஸ்டு பீல்டு' என்ற ஊரில் இவள், தங்கள் பெற்றோருடன் வாழ்ந்து வந்தாள்.

இவளது தந்தையார் புகைப்படம் ஒன்றைக் கொண்டு வந்து இவள் கையில் கொடுத்தார். கிரேஸ் பார்த்த முதல் புகைப்படமே இதுதான். படத்தில் லிங்கன் காய்ந்து வறண்ட முகத்தோடு காணப்பட்டார். அவரது தோற்றம் மிகவும் மெலிந்து தெரிந்தது.

கிரேசுக்கு லிங்கன்மீது இரக்கம் தோன்றியது. ஐயோ, பாவம்! எவ்வளவு ஒல்லியான மனிதர்!

அப்போது லிங்கன் ஜனாதிபதி தேர்தலுக்கு நின்றிருந் தார். ஊர்கள் தோறும் சென்று தேர்தல் பிரச்சாரம் நடத்திக் கொண்டு வந்தார்.

தேர்தலில் லிங்கன் வெற்றி பெற வேண்டும் என்ற ஆர்வம் கிரேசுக்கு. ஆனால் இவ்வளவு மெலிந்து ஒல்லியான மனிதருக்கு, மக்கள் தங்கள் வாக்கை அளிப்பார்களா? இப்படி ஒரு ஐயம் அவளுக்கு ஏற்பட்டது. அவர் தாடி வளர்த்துக்கொண்டால் அந்த முகம் கொஞ்சம் அழகாக இருக்குமே என அவளுக்குப் பட்டது. தனது இந்தக் கருத்தை அவரிடம் யார் சொல்லப் போகிறார்கள்?

நீண்ட நேரச் சிந்தனைக்குப் பிறகு தானே அவருக்கு ஒரு கடிதம் எழுதுவது எனக் கிரேசி தீர்மானித்தாள்; அவ்வாறே அவள் லிங்கனுக்கு ஒரு கடிதம் எழுதவும் செய்தாள். அதில் அவள்:

''மதிப்பிற்குரிய பெரியீர், நான் பதினொரு வயதுடைய ஒரு சிறுமி. தங்களுக்கு மிகத் துணிச்சலாகக் கடிதம்

எழுதும் என்னைத் தவருகக் கருதமாட்டீர்கள் என எண்ணு கிறேன். என்னைப் போன்ற பெண்கள் தங்களுக்கிருந்தால் அவர்களுக்கு என் அன்பை அறிவியுங்கள்.

எனக்கு நான்கு சகோதரர்கள் உள்ளனர். இத்தேர்தலில் அவர்களைத் தங்களுக்கே வாக்களிக்கும்படி செய்வேன்.

இன்னென்று தங்களிடம் சொல்ல ஆசைப்படுகிறேன்; தங்கள் முகத்துக்குத் தாடி வளர்த்துக்கொண்டால் நன்ருக இருக்குமென எண்ணுகிறேன். அப்போது தங்கள் முகம் அழகு பொருந்தியும் பெருமிதம் நிரம்பியும் விளங்கும்; பெண்கள் அனைவரும் தங்களுக்கே வாக்களிப்பார்கள்; அவர் கள் தம் தம் கணவன்மார்களையும் தங்களுக்கே வாக்களிக்க வைப்பார்கள்; பின்னர் நீங்களே இந்நாட்டின் தலைவர்.

இக்கடிதத்துக்குத் தங்களுக்குப் பதில் எழுதப் பொழு தில்லையென்ருல் தங்கள் குழந்தையைக் கொண்டாவது பதில் எழுதச் சொல்லுங்கள்'' எனத் தெரிவித்திருந்தாள்.

இக்கடிதங்கள் லிங்கனின் அந்தரங்கக் காரியதரிசிகளிடம் வந்து சேர்ந்தது. பிரித்துப் பார்த்த அவர்கள், தேர்தல் வெற்றிக்குச் சிறு பெண்களும் ஆலோசனை சொல்லத் தொடங்கிவிட்டார்கள்' என்று சொல்லி நையாண்டி செய் தார்கள்; அக்கடிதத்தைக் குப்பைத்தொட்டியில் போட இருந்த வேளையில் எதிரபாராத நிலையில் அங்கே வந்த லிங்கன் கையில் அக்கடிதம் கிடைத்தது.

கடிதத்தைப் பார்த்த அவர், கிரேசிக்குத் தம் கைப் படவே பதிலும் அனுப்பினர்.

பின்னர் தேர்தலில் மிகுந்த வாக்குகளோடு லிங்கன் வெற்றி பெற்ருர். எனவே அவர் தலைநகரான வாஷிங்

டனுக்கு விரைந்து கொண்டிருந்தார். 'வெஸ்டு பீல்டில்' வண்டி நிற்கும் என்ற செய்தி திடீரென வந்தது.

வெஸ்டு பீல்டு மக்கள் தலைவரைக் கண்டு, வணக்கம் தெரிவிக்க ஸ்டேஷனில் வந்து பெருந்திரளாகக் கூடியிருந் தனர். கிரேஸ்பெடலும் தனது பெற்றோருடன் லிங்கனைப் பார்க்க அங்கே வந்திருந்தாள்.

தமது வெற்றிக்கு ஒத்துழைத்த மக்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டார் லிங்கன். குறிப்பாக பெண்களிடம் தமக்குள்ள ஆழ்ந்த நன்றியுணர்ச்சியை வெளிப்படுத்தினர்.

அவர் அக்கூட்டத்தில், "இவ்வூரிலுள்ள சிறுமி ஒருத்தி எனக்குக் கடிதம் எழுதியிருந்தாள்; எனது தோற்றத்தில் மாற்றம் ஏற்பட்டதற்கு அவளே காரணம். அவள் இங்கே வந்திருந்தால் என் பக்கம் வரலாம்" என்று தெரிவித்துக் கிரேசியை அழைத்தார்.

"அவள் பெயர் என்ன?" எனக் கூட்டத்தினர் ஆரவாரத் தோடு கேட்டார்கள்.

"கிரேஸ் பெடல்" என்றூர் லிங்கன்.

தனது புதல்வியை லிங்கன் பக்கமாக அழைத்துச் சென்றூர் கிரேஸ் பெடலின் தந்தை. பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடிய அக்கூட்டத்தில் தந்தையும் மகளும் லிங்கன் பக்கம் சென்றனர். அனைவரும் அவர்கள்மீது பார்வையைச் செலுத்தினர்.

லிங்கன் கிரேசியை அன்புடன் வாரியெடுத்து முத்தங்கள் கொடுத்தார். எனது புதிய தோற்றத்திற்கு இச்சிறுமியே காரணம் என்றும் அக்கூட்டத்தினரிடம் அவளை அறிமுகம் செய்து வைத்தார்.

லிங்கன் அனைவரிடமும் நன்றியுணர்ச்சியுடன் விடை பெற்று, வாஷிங்டன் பயணப்பட்டார்.

ஸ்பிரிங் பீல்டிலுள்ள ஆபிரகாம் லிங்கன் இல்லத்தில் காணப்படும் ஓர் அறையில் இன்றும் கிரேஸியின் கடிதத்தைப் பார்க்கலாம்.

## 49. திருமண அன்பளிப்பு

அமெரிக்கக் கோடீஸ்வரர் கார்னீகி, பெண்கள் கல்லூரி ஒன்றில் சொற்பொழிவாற்றச் சென்றிருந்தார். தம்முன்னே வீற்றிருந்த பெண்களைக் கவனித்தார். அத்தனை பேரும் இளம் பெண்கள்; அழகுத் தோற்றமுடன் அவர்கள் காட்சி அளித்தார்கள்.

அவர்களைப் பார்த்து கார்னீகி, "நீங்கள் எல்லோரும் மணப் பெண்களைப்போல் தோற்றம் அளிக்கிறீர்கள். உங்களில் யாரேனும் திருமணம் செய்துகொள்ள விரும்புவீர்களாயின் எனக்கு அறிவியுங்கள். அதற்கான உதவியை நான் செய்கிறேன்" எனத் தெரிவித்தார்.

அவர் இவ்வாறு கூறியதுதான் தாமதம். அடுத்த நாள் அக்கல்லூரிப் பெண்களிடமிருந்து கட்டுக் கட்டாகக் கடிதங்கள் வரத் தொடங்கின. அவற்றில் ஒவ்வொரு பெண்ணும் தான் காதல் கொண்டுள்ள இளைஞன் பெயரைத் தெரிவித்து, அதற்கு உதவியைக் கோரியிருந்தாள்.

கார்னீகி ஒவ்வொருவருக்கும் திருமண அன்பளிப்பு உதவியாக 500 டாலர் காசோலைச் (Cheque) சீட்டை அனுப்பி வைத்தார்.

மணமான பெண் ஒருத்தி, இவருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தாள்; அவள் அடிக்கடிதத்தில் தனக்குத் திருமணம் ஆகிவிட்டதாயும் இவ்வாறு கார்னீகியின் உதவி

கிடைக்குமெனத் தெரிந்திருந்தால் தனது மணத்தைக் காலம் தள்ளி வைத்திருக்கக் கூடுமென்றும் தெரிவித்து ஆற்ருமைப்பட்டிருந்தாள்.

கார்னிகி அவளை ஏமாற்றத்துக்குட்படுத்தவில்லை. அவளுக்கும் 500 டாலருக்கு ஒரு காசோலை அனுப்பி வைத்தார்.

## 50. பூகம்பத்தை உணராதவர்கள்

விஞ்ஞான மேதை ஈன்ஸ்டீன் ஒருமுறை கலிபோர்னியாவுக்குச் சென்றிருந்தார். அங்கு பூகம்ப ஆராய்ச்சி நிபுணர் ஒருவரோடு இவருக்குச் சந்திப்பு ஏற்பட்டது. இருவரும் நீண்ட நேரமாக உரையாடிக் கொண்டிருந்தார்கள். இதில் இவர்களுக்குப் பொழுது போனதே தெரியவில்லை.

உரையாடலை முடித்துக்கொண்டு ஈன்ஸ்டீன் தாம் தங்கியிருந்த விடுதிக்குச் சென்ருர். அங்கு ஒரே குழப்பமாக இருந்தது. மக்கள் திக்பிரமை பிடித்த நிலையில் அங்கங்கே காணப்பட்டனர்.

ஒன்றும் புரிந்து கொள்ள முடியாத ஈன்ஸ்டீன் நேரே தமது அறைக்குச் சென்ருர்; அங்கே அவரது மனைவியார் மயக்கமாகிக் கிடந்தார். அவ்வம்மையாரை மயக்கம் தெளிவித்து ஈன்ஸ்டீன், அவரிடம், "என்ன குழப்பம்?" எனக் கேட்டார்.

"என்ன குழப்பமா? சற்று நேரத்துக்கு முன் பூகம்பம் ஏற்பட்டதே, உங்களுக்குத் தெரியாதா?" என அவ்வம்மையார் வியப்போடு ஈன்ஸ்டீனைத் திருப்பிக் கேட்டார்.

பரபரக்க விழித்தார் ஈன்ஸ்டீன். அவருக்கோ, பூகம்ப ஆராய்ச்சி நிபுணருக்கோ, பூகம்பம் ஏற்பட்டதே தெரிய

வில்லை; அவர்கள் தங்கள் உரையாடலில் அவ்வளவு ஈடுபாடு கொண்டிருந்திருக்கிறார்கள்.

## 51. திருட்டுக் குற்றம்

காந்தியடிகள் வார்தா ஆசிரமத்தில் தங்கியிருந்த காலம். கஸ்தூரிபா அம்மையார் தம்மிடம் அவ்வப்போது வருகின்ற பணங்களையெல்லாம் சேர்த்து மொத்தமாக வைத்திருந்தார்; அப்பணத்தைக்கொண்டு தம் பேர்த்திக்கு ஏதேனும் நகை செய்து போடவேண்டும் என்றுள்ள எண்ணம் அவருக்கு! எனவே அடக்கமாகவே இவ்வம்மையார் அப்பணத்தைப் பாதுகாத்து வைத்திருந்தார்.

ஒருநாள் இப்பணம் முழுவதும் திருடு போய்விட்டது. இந்நிகழ்ச்சியைக் கஸ்தூரிபா அம்மையாரால் தாங்கிக் கொள்ள இயலவில்லை; ஆற்றாமையும் துன்பமும் அவரது உள்ளத்தை வருத்திக் கொண்டிருந்தன.

பணம் திருடு போன செய்தியைக் காந்தியடிகள் எவ்வாறோ அறிந்துவிட்டார்; திருடனைத் தாம் கண்டு பிடித்து விடுவதாகக் கூறி ஆசிரமவாசிகளை ஒரு குறிப்பிட்ட இடத்தில் வந்து சேரும்படிக் கட்டளை இட்டார்; அவ்வாறே அனைவரும் அங்கே வந்து திரண்டனர்.

அக்கூட்டத்தில் காந்தியடிகள், அன்னை கஸ்தூரிபாயின் கையைப் பிடித்து, "இவள்தான் திருடி" என்று உச்சக் குரலில் முழங்கினார்.

காந்தியடிகளின் செயல் அனைவருக்கும் வியப்பை அளித்தது. அவர்கள் திகைப்போடு விழித்துக்கொண்டு நின்றனர்.

காந்தியடிகள் அவர்களிடம், "பணத்தைச் சேர்த்து வைப்பது நம் கொள்கைகளுக்கு எதிரானது. அப்படி

யிருக்கத் திருட்டுத்தனமாகப் பணம் சேர்த்து வைத்திருந்த கஸதூரிபாதான் திருடி'' என்று கூறினர்.

கஸ்தூரிபா தாம் செய்த தவறுக்கு வெட்கமுற்ருர்.

## 52. விளையும் பயிர் முளையிலே

வல்லபாய் படேலின் மாணவப் பருவம். இவர் நயாத் என்னும் ஊரிலுள்ள பள்ளிக்கூடம் ஒன்றில் படித்து வந்தார். அவர் வகுப்பின் ஆசிரியர் தம் ஆசிரியத் தோழியோடு, பள்ளி மாணவருக்குரிய 'புத்தகம், நோட்டுப் புததகம், பென்ஸில் போன்ற பொருள்களையும் வியாபாரம் செய்து வந்தார். அவர் தம்மிடமுள்ள பொருள்களையே வாங்க வேண்டுமென மாணவர்களை வலியுறுத்தியும் அச்சுறுத்தியும் இவ்வியாபாரத்தை நடத்திக் கொண்டிருந்தார்.

ஒருமுறை படேல் தமக்குத் தேவைப்பட்ட நோட்டுப் புத்தகம் ஒன்றைக் கடை வீதியிலிருந்து வாங்கி வந்தார். இதை அறிந்த வகுப்பாசிரியருக்குக் கோபம் பொங்கி விட்டது. ஆசிரியர் படேலைக் கூப்பிட்டு இச்செயலுக்கு அவரைக் கண்டித்தார். ஆசிரியரின் இப்போக்கு மாணவர் படேலிடம் ஆத்திர உணர்ச்சியைக் கிளப்பியது. இது தங்கள் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதுபோல் படேலுக்குப் பட்டது.

மற்ெருரு முறை படேல் கடைவீதிக்குச் சென்று வேறு ஏதோ ஒரு பொருளை வாங்கிக்கொண்டு வந்தார். இதை அறிந்த ஆசிரியர் படேலை அழைத்து, ''இனி உனக்குத் தேவைப்படும் பொருள்களை என்னிடமே வாங்கிக்கொள்ள வேண்டும். கடைவீதிக்குச் சென்று வாங்கவே கூடாது. இது என் கண்டிப்பான கட்டளை'' என்று கூறி மேலும் அவருக்கு வசைச் சொற்கள் வழங்கினர்.

இதைக் கேட்ட மாணவர் படேலுக்கு அமைதியாக இருந்துகொள்ள முடியவில்லை. ஆத்திர உணர்ச்சி மேலிட்டு, "உங்களிடந்தான் வாங்க வேண்டுமென்று ஏதேனும் சட்டம் இருக்கிறதா? இதுபோன்ற வழக்கம் வேறு எந்தப் பள்ளிக்கூடத்திலாவது உண்டா?" என்று கேட்டார்.

இவ்வாறு ஆசிரியரிடம் படேல் எதிர்த்துப் பேசியதைக் கேட்ட மாணவர் கூட்டம் திகைப்பிலும் வியப்பிலும் மூழ்கி யிருந்தது. ஆசிரியரிடமோ ஆத்திர உணர்ச்சி மேலோங்கி நின்றது. அவர் அடக்கத்தை இழந்த நிலையில் படேலைப் பார்த்து, "இந்தப் பள்ளியில் அந்தச் சட்டம் உண்டு. நீ இங்கே படிக்க வேண்டுமானால் என்னிடம் பொருள்கள் வாங்கியே ஆகவேண்டும்" என்று முழங்கினார்.

இதைக் கேட்ட படேல் மீண்டும் அவ்வாசிரியரை நோக்கி, "ஐயா, நீங்கள் பாடம் கற்பிக்கவே இங்கு அமர்த் தப்பட்டிருக்கிறீர்கள்! வியாபாரம் நடத்துவதற்கல்ல. இந்த வியாபாரத் தொழிலை நிறுத்திவிட்டுக் கருத்தாக எங்களுக்குப் பாடம் கற்பியுங்கள். நாளையிலிருந்து நாங்கள் பள்ளிக்கூடம் வரப்போவதில்லை. இந்த வியாபாரத்தை நீங்கள் நிறுத்திய பிறகுதான் மீண்டும் இங்கே வருவோம்" என்று சொல்லி விட்டு வெளியேறினார்.

மாணவர்கள் அனைவரும் படேலுடன் சேர்ந்து கொண் டார்கள். ஒருவராவது பள்ளிக்குச் செல்லவில்லை. வகுப் பறைகள் அனைத்தும் வெறுமையாகக் காட்சி அளித்தன. மாணவர்கள் பள்ளிக்குச் செல்லாததால் பள்ளிக்கூடமே மூடப்பட்டது.

ஆசிரியர் தம் பிழையை உணர்ந்து திருத்திக் கொண் டார். இதன் பின்னரே மாணவர்கள் பள்ளிக்குச் சென்றனர். படேலின் சுதந்திர உணர்ச்சியும், திண்மையான உள்ளமும் மாணவர்களிடம் அவருக்குப் பெருமதிப்பை ஏற்படுத்திக்

கொடுத்தன. பிற்காலம் இவர் சிறந்த தலைவராகத் திகழ்வார் என்பதை இத்தகைய அவரது இளமைக்கால வாழ்க்கை நிகழ்ச்சிகளே மெய்ப்பித்துக் காட்டின.

## 53. அறிவுத் தாகம்

அமெரிக்க அரசாங்கத்தில் 'சுப்ரீம் கோர்ட்' பிரதம நீதிபதியாகப் பணியாற்றியவர் ஆலிவர் வென்டல் ஹோல்ம்ஸ் ஆவர். இவர் தம் 90வது வயது வரையிலும் இப்பதவியிலமர்ந்து பணியாற்றி வந்தார். நடுநிலை கோணாது தீர்ப்பு வழங்குவதில் யாருக்கும் அஞ்சாதவர். அதில் ஈவு இரக்கம் என்பதே அவர் காட்டுவதில்லை.

ஜனாதிபதியாக இருந்த ரூஸ்வெல்ட் இவரது நெருங்கிய நண்பராக இருந்தார். இவர் ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றதும் தம் அன்பையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்ள வெண்டலின் இல்லத்துக்கு வந்திருந்தார். இவர் வந்த நேரம் வெண்டல், பிளேட்டோ எழுதிய தத்துவ சாஸ்திரத்தைப் படித்துக் கொண்டிருந்தார்.

இதைக் கண்ட ரூஸ்வெல்ட் இவரிடம், "இந்த வயதில் பிளேட்டோவின் நூலை ஏன் படித்துக் கொண்டிருக் கிறீர்கள்?" என்று வினவினர்.

வெண்டல் இதற்குப் புன்னகையோடு, "என் அறிவை வளர்த்துக் கொள்ளத்தான்" என்று பதில் அளித்தாராம்.

என்னே முதியவரின் அறிவுத் தாகம்!

## 54. அரசனும் கொள்ளைக்காரனும்

மாவீரன் அலெக்சாண்டர் முன்னிலையில் கைது செய்யப் பெற்ற டியோண்டஸ் என்ற கடல் கொள்ளைக்காரன் விசாரணைக்காகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டான்.

அலெக்சாண்டர் அவனை ஏற இறங்கப் பார்த்தார். பின்னர் அவனிடம், இத்தகைய நாசவேலைகளைச் செய்ய உனக்கு எங்கிருந்து துணிவு வந்தது? எனக் கேட்டான்.

அவன் இதற்கு மறுமொழியாக, "அரசே, உலகத்தையெல்லாம் அடக்கியாள வேண்மென்றுள்ள துணிவு உங்களுக்கு எங்கிருந்து வந்ததோ, அங்கிருந்துதான் எனக்கும் இத்துணிவு வந்தது" எனக் கூறினான்.

"அதென்ன அப்படிப் பேசுகிறாய்?" என்று கேட்டான் அலெக்சாண்டர்.

"உண்மையாகத்தான் சொல்கிறேன் அரசே! என்னிடம் ஒரு கப்பல் இருப்பதால் நான் கொள்ளைக்காரன் என்று பேசப்படுகிறேன்; தங்களிடம் ஒரு மாபெரும் கடற்படை இருப்பதால் தாங்கள் மாவீரன் என்று புகழப்படுகிறீர்கள். நாம் இருவரும் செய்யும் செயல் அளவில் சிறிது பெரிதே தவிர வேறு எதுவும் வேற்றுமை இல்லையே!" என்று சொன்னான் டியோண்டஸ்.

இம்மொழிகளைக் கேட்ட அலெக்சாண்டர் வேறு எதுவும் பேசாது அவனை விடுதலை செய்தான்.

## 55. இறைவனே அருள் புரிக!

இளைஞன் ஒருவன் தனது கடமையில் தவறிவிட்டான் என்பதற்காக அவன்மீது குற்றச்சாட்டு. காவல் காத்துக் கொண்டிருந்த வேளையில் அவன் தூங்கிவிட்டான் என்பதே அவன்மீதுள்ள குற்றம். இதற்காக அவனுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டிருந்தது.

இத்தண்டனையை நிறைவேற்றிக் கொள்ள ஜனாதிபதி லிங்கன் இசைவு கொடுக்க வேண்டும். ஆனால் அவர் கொடுக்கவில்லை. அவர் இதற்களித்த பதில் இதுவே

"இவன் சிறு வயதில் விவசாய வேலை செய்து, அக்களைப் பால் இரவில் தூங்கும் பழக்கமுடையவனுய் இருக்க வேண்டும். அவன் வேலையில் ஏதோ தவறுதல் நடந்து விட்டது; இதற்காக இவனுக்கு நான் மரண தண்டனையை அனுமதிக்க முடியாது. அவ்வாறு அனுமதித்தால் அது நான் செய்யும் பாபமே! எனக்கு மோட்சத்தைப்பற்றி நினைக்கவே வழியில்லாது போய்விடும்."

வாலிபன் விடுதலை பெற்றுத் தனது அலுவலுக்குச் சென்றுவிட்டான்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு நடந்த போரில் அவன் இறந்துவிட்டான். இவன் உடலைப் பரிசோதித்தபோது தனது மார்பில் இவன் ஜனுதிபதி லிங்கனின் படத்தைத் தொங்க விட்டிருந்தான்.

"இறைவனே, ஜனுதிபதிக்கு அருள் புரிக!" என்ற வாசகம் அதில் எழுதப்பட்டிருந்தது.

## 56. மேதை கேட்ட சம்பளம்

விஞ்ஞான மேதை ஈன்ஸ்டீன் ஜெர்மன் நாட்டில் பிறந்தவர். யூதர் என்ற காரணத்தால் நாஜி அரசாங்கம் இவரை நாடு கடத்தியது. இவருக்குப் புகலிடம் கொடுக்கப் பல நாடுகள் முந்திக் கொண்டு வந்தன. எனினும் இவர் அமெரிக்க நாட்டையே தமக்கேற்ற இடமாகக் கொண்டார்.

அமெரிக்க அரசாங்கமும் இவரை ஆர்வமுடன் வரவேற்றது. அங்குள்ள பிரின்ஸ்டன் பல்கலைக்கழகம் இவரைத் தன் விஞ்ஞான ஆராய்ச்சிக்கூடத் தலைவராக ஏற்றுக்கொள்ள இசைந்தது.

பல்கலைக் கழகத் தலைவர் இவரிடம், "நீங்கள் இங்கே எவ்வளவு சம்பளம் விரும்புகிறீர்கள்?" என்று கேட்டார்.

ஈன்ஸ்டீன் இதற்குப் பதிலளிக்காது தயங்கிக் கொண் டிருந்தார். தலைவரையும் அவரைச் சுற்றி இருந்தவர்களையும் பார்த்துவிட்டுத் தமது உள்ளங்கையையே பார்த்துக் கொண் டிருந்தார். சிறிது நேரம் வரை இவரது வாயிலிருந்து தனக்கு இவ்வளவு தரவேண்டும் என்ற பேச்சு வரவில்லை.

தலைவர் மீண்டும் அவரிடம் கேட்கலானார். இதற்கு ஈன்ஸ்டீன் பதிலாக, ''எனக்கு மிகுந்த செலவுண்டு. ஆயிரம் டாலர்வரை கிடைத்தால் சௌகரியமாய் இருக்கும். வேண்டு மானல் நீங்கள் கொஞ்சம் குறைத்துக் கொள்ளுங்கள்'' என்று பதிலளித்தார்.

இதைக் கேட்ட தலைவருக்கும் ஏனைய பல்கலைக்கழக உறுப்பினருக்கும் சிரிப்பு தாங்கக்கூடவில்லை. இதைப் பார்த்த ஈன்ஸ்டீனுக்கு தாம் கேட்ட தொகை மிகுதியாகி விட்டதோ என்ற ஐயத்தை ஏற்படுத்தியது.

தலைவரும் ஏனையவரும் ஈன்ஸ்டீனைப் பார்த்து, ''நீங்கள் என்ன, இப்படிக் குறைத்துக் கேட்கிறீர்கள்? இந்தக் குறை வான சம்பளத்தைத் தந்தால் எங்கள் பல்கலைக் கழகத்துக் கல்லவா இழிவு! மேலும் உலகம் எங்களை அறிவாற்றலின் மதிப்பை எடைபோடத் தெரியாதவர்கள் என்றல்லவா தூற்றும்! உங்களுக்கு மாதம் ஒன்றுக்கு 5000 டாலர்கள் தர இசைகிறோம்'' என்று மொழிந்தார்கள்.

அதைக் கேட்ட மேதை ஈன்ஸ்டீனுக்குத் தமது செவி களையே நம்பக்கூடவில்லை. வியப்பில் அவர் சமைந்து நின்றார்.

## 57. தந்தைக்கு விலங்கிட்ட மைந்தன்

விஜயநகரப் பேரரசைக் கிருஷ்ண தேவராயர் ஆண்டு வந்தபோது, நாகம நாயக்கர் தட்சிண மகா மண்டலாபதி

யாக இருந்தார். ராயருக்கு அடுத்தபடியாக உள்ள பெரு மக்களில் இவரே முதன்மைபெற்று விளங்கினர்.

அக்காலம் பாண்டி நாட்டைச் சோழ மன்னன் கைப் பற்றித் தன் ஆட்சியின் கீழ்ப்படுத்தினன். இந்த அநீதத்தைப் பாண்டி மன்னன் சந்திரசேகரபாண்டியன், பேரரசர் கிருஷ்ண தேவராயாரிடம் வந்து அறிவித்தான்.

கிருஷ்ண தேவராயருக்குச் சோழன்மீது அளவில்லாத சீற்றம் பிறந்தது. உடனே நாகம நாயக்கரிடம் சோழ வேந்தன்மீது படையெடுக்க வேண்டினர். சோழனை வென்று பாண்டிய மன்னனிடம் அவன் நாட்டை ஒப்புவிக்க வேண்டு மென்பது கிருஷ்ணதேவராயரின் கட்டளை.

கிருஷ்ண தேவராயரின் கட்டளையைத் தலைமேற்றங்கி நாகம நாயக்கர், ஒரு பெருஞ் சேனையுடன் சோழன்மீது படையெடுத்தார். இருவருக்கும் மும்முரமாகப் போர் நடந்தது. இருதரப்பிலும் நூற்றுக்கணக்கான வீரர்கள் மடிந்தனர். இறுதியில் நாகம நாயக்கரே வெற்றி பெற்றார்.

பாண்டிய நாட்டை அவனிடம் ஒப்புவித்து அவனுக்கு முடியும் சூட்டினர். பாண்டி நாட்டிலேயே நாகம நாயக்கர் விஜயநகரப் பிரதிநிதியாக இருக்காலனர்.

பாண்டி நாட்டின் வளமும் எழிலும் நாகம நாயக்கரின் உள்ளத்தைக் கவர்ந்தன. மண்டலாதிபதியாக இருப்பதை விட மதுரைச் சீமையின் மன்னராக இருக்க அவரது உள்ளத் தில் ஆசை கிளர்ந்தது. எனவே அவர், அறநெறியை மறந்து, கெடு வழியில் செல்லத் துணிவு கொண்டார். சேனை களைத் தம் வயப்படுத்தினர். சந்திரசேகரனைச் சிறையி லிட்டார். நாகமன் பாண்டிய நாட்டின் அதிபதியானர்.

இவ்வநீதச் செயல் பேரரசர் கிருஷ்ண தேவராயர் செவி ளுக்கெட்டியது. கோபத்தால் அவரது முகம் சிவந்தது; கண்கள் கனலேச் சிந்தின. பற்களே நறநறவெனக் கடித்துக் கொண்டார். வேலியே பயிரை மேயும் இந்த விபரீதத்தை உடனே விலக்க அவர் முனேப்புக் கொண்டார்.

அரசவையைக் கூட்டினர் கிருஷ்ண தேவராயர். அமைச்சர்களேயும் தளபதிகளேயும், முதன்மையாளர்களேயும் வரவழைத்தார். நாகம நாயக்கரை வென்று அவர் தலேயைக் கொணரும் வல்லமையுடையோர் இந்த அவையில் யாரேனும் உளரோ என முழங்கினர்.

பேராற்றல் படைத்த நாகம நாயக்கரை வெல்லும். வல்லமை உடையவர் அந்த அவையில் யார் உளர்? எவரும் எழுந்திருக்கவில்லே. அவையில் ஒரே அமைதி!

பின்னர் இருவர் எழுந்து நின்றனர். ஒருவன் நாகம நாயக்கரின் புதல்வன் விசுவநாத நாயக்கன். மற்றவன் அரிய நாத முதலி. கிருஷ்ண தேவராயர் விசுவநாதனேப் பார்த்து, "உன் கடமையுணர்ச்சியையும் நாட்டுப்பற்றையும் பாராட்டு கிறேன்" என்று சொல்லி, அவன் தந்தை நாகம நாயக்கரின் அநீதத்தை அவனிடம் தெளிவுற எடுத்துக் கூறினர். தஞ்சம் புகுந்த பாண்டியன் அரசை வஞ்சகமாகக் கவர்ந்து கொள்ளுதல் நீதியாகுமோ எனக் கேட்டார்.

இதற்கு என்ன பதில் சொல்வான் விசுவநாதன். தன் தந்தையின் அநீதச் செயல் அவனுக்கு வேதனே அளித்த தோடு அவர்மீது வெறுப்பும் கொள்ள வைத்தது.

ஆயினும் தந்தைப் பாசம் அவனே ஒரு கணம் தத்தளிக்கவும் வைத்தது; அவன் தன்னேச் சரி செய்து கொண்டு, பேரரசைப் பார்த்து, "மன்னர் பெருமானே,

நாட்டை ஆளும் தாங்களே என் தந்தை; தங்கள் கட்டளையை நிறைவேற்றுவதே என் கடமை. இதோ புறப்படுகிறேன்'' எனப் போருக்கு ஆயத்தமானுன்.

கிருஷ்ண தேவராயர் விசுவநாதனிடம், ''நீ செல்வ தால் உன் தந்தையைக் கொல்ல வேண்டாம்; ஆனுல் அவரைச் சிறைப் பிடித்து விலங்கிட்டுக் கொண்டு வருக!'' எனத் தம் கட்டளையில் சிறிது மாறுதல் செய்தார்; விசுவ நாதன் துணைக்கு அரியநாத முதலியையும் அனுப்பி வைத் தார் பேரரசர்.

போர்க்களத்தில் கிருஷ்ண தேவராயர் படையும் நாகம நாயக்கர் படையும் ஒன்றையொன்று சீறித் தாக்கின. தம் புதல்வனே தம்மை எதிர்க்க வந்ததை உணர்ந்த நாகம நாயக்கரின் சீற்றம் அளவு மீறிப் பொங்கியது.

இருதரப்பினருக்கும் கடுமையாக நடந்த இப்போரில் விஜயநகரப் படையே வெற்றி கண்டது; இவ்வெற்றிக்குத் துணையாக அமைந்தன அரியநாத முதலியின் மதிமிகுந்த ஆலோசனைகள்!

விசுவநாதன் தன் தந்தையைச் சிறைப் பிடித்துக் கொண்டான்! பெற்றவர் முகத்தைப் பார்த்ததும் அவன் உள்ளம் உருகிவிட்டது; கண்கள் நீரைக் கொட்டின; அந்த வீர மைந்தன் அழுது புலம்பினுன்; பெற்று வளர்த்துத் தன்னை ஆளாக்கிய தந்தைப் பாசம் அவனைக் குழந்தை போலாக்கிக் கதற வைத்தது.

நாகம நாயக்கனுக்குத் தன் மகன்மீதுள்ள சீற்றம் குறைந்தது; அவனது நாட்டுப் பற்றும் கடமையுணர்ச்சியும் வீரப் பெருமிதமும் அவரது உள்ளத்தில் மகிழ்ச்சியைப் பொங்க வைத்தன; அவனை வாழ்த்திக் கொண்டதோடு விலங்கை அணிந்து கொள்ளவும் அவர் தாமாகவே முன் வந்தார்.

விலங்கிட்டு நாகம நாயக்கரை பேரரசர் கிருஷ்ணதேவ ராயர் முன்னே கொண்டுபோய் நிறுத்தினன் விசுவநாதன்; தேவராயருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் எல்லேயே இல்லா திருந்தது! அவர் விசுவநாதன் கடமையுணர்ச்சியைப் பாராட்டிப் புகழ்ந்தார். அவனுக்குப் பரிசும் வழங்கினர்.

வழங்கிய பரிசு என்ன தெரியுமா? அவன் தந்தைக்கு விடுதலே அளித்ததே.

## 58. காந்தியடிகளும் கலேல்கரும்

காந்தியடிகள் ஒருமுறை ஷிமோகாவுக்குச் சென் றிருந்தார்; அவருடன் காகா கலேல்கர் போன்றவர்களும் உடன் சென்றிருந்தனர்.

கலேல்கர் காந்தியடிகளிடம், "இங்கே கெரஸப்பா நீர்வீழ்ச்சியை நாம் பார்க்க வேண்டாமா?" என்று கேட்டார்.

"எனக்கு நிறைய வேலேகள்" என்ருர் அண்ணல்.

"இவ்வளவு தொலே வந்தும் இந்த நீர்வீழ்ச்சியைப் பார்க்காமல் போகலாமா? மறுபடியும் இங்கே வருகி ருேமோ, என்னமோ?" என்ருர் கலேல்கர்.

"என்னல் இப்படியெல்லாம் மனம்போன போக்கில் சுற்றிக் கொண்டிருக்க நேரம் இல்லே; வேண்டுமானல் நீங்கள் போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள். மாணவர் களுக்குச் சொல்லிக் கொடுக்க உங்களுக்கு ஏதேனும் புதிய செய்திகள் கிடைக்கலாம்" என்று சொல்லி மறுத்து விட்டார் காந்தியடிகள்.

"உலகச் சிறப்புற்ற நாயகரா நீர்வீழ்ச்சியை விடவும் இது மிக உயரத்திலிருந்து வீழ்கிறதாம்; இதை நீங்கள்

அவசியம் பார்த்துதான் ஆகவேண்டும்'' என்று மீண்டும் வலியுறுத்தினர் கலேல்கர்.

''இதிலென்ன அதிசயம்? ஆகாயத்திலிருந்து விழும் மழைத் தண்ணீரைவிடவுமா இது உயரத்திலிருந்து கொட்டுகிறது?'' என்று பதில் மொழிந்தார் காந்தியடிகள்.

## 59. ஆன்மீக இயக்கம்

ஒருமுறை கூட்டமொன்றில் அன்னிபெஸன்டு அம்மையாரை மிதவாதிகள் காரசாரமாகத் தாக்கிப் பேசிக் கொண்டிருந்தார்கள்! அம்மையாரும் அக்கூட்டத்தில் இருந்தார்; ஆனல் அவரது கவனம் தமது பத்திரிகைக்குக் கட்டுரை எழுதுவதில் இருந்தது.

அருகேயிருந்த ஜமுனதாஸ் அன்னிபெஸன்டிடம், ''இதோ, இவர் உங்களைத் தாக்கிப் பேசுகிறார்; சற்றுக் கவனித்துக் கேளுங்கள்'' என்று கூறினர்.

''ஆம், நான் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்; அதே நேரம் பத்திரிகைக்கும் எழுதிக்கொண்டிருக்கிறேன்'' என்று பதிலளித்தார் அன்னிபெஸன்ட்.

பேச்சாளர்கள் பேசி முடித்ததும் தமது கட்டுரை வேலையை முடித்துக்கொண்டு அன்னிபெஸன்டு அம்மையார் பேசலானர்; தம்மைக் குறை கூறியவர்களுக்கெல்லாம் சூடாகப் பதில்கள் அளித்தார்.

பின்னர் ஜமுனதாஸ், அம்மையாரிடம் இதைக் குறித்துக் கேட்டபோது அவர் அளித்த பதிலாவது: ''அரசியல் பணியையும் எனது ஆன்மிகப் பணிகளில் ஒன்ருகவே எண்ணியிருக்கிறேன்; வெவ்வேருகப் பெட்டியில் வைத்துப் பூட்டும்

பொருள்களைப் போல ஆன்மீகப் பணிகளையும் ஏனையப் பணிகளையும் பிரிக்க இயலாது; வாழ்க்கை முழுவதிலும் ஆன்மீகக் கண்ணோட்டம் வேண்டும்; நாம் செய்யும் ஒவ்வொரு பணியிலும் அதன் இயக்கம் இருந்தே தீரவேண்டும்.

## 60. கனவில் கண்ட காட்சி

மதுரையை ஆண்டு வந்த இராணி மங்கம்மாள், ஒரு நாள் இரவு உறக்கத்தில் ஒரு கனவு கண்டார்: அக்கனவில் கொள்ளிடக் கரையில் வெள்ளம் பெருக்கெடுத்து அக்கம் பக்கங்களிலுள்ள நிலங்களையும் வீடுகளையும் அழித்ததாகவும் மரங்களை வேரற வீழ்த்தி, தோட்டக் காடுகளை சிதைத்ததாகவும், விஷ்ணுகோயில் ஒன்று நீரில் அமிழப்பெற்று அதிலிருந்த இரண்டு விக்கிரகங்கள் நீரால் இழுத்துச் செல்லப்பட்டு, ஒரு மேட்டு நிலத்தில் கொண்டு ஒதுக்கப் பட்டதாகவும் காட்சி! அவ்விக்கிரகங்களில் விஷ்ணு விக்கிரகம் ஒன்றிலிருந்து பேரொளி தோன்றியது! அதிலிருந்து எழுப்பிய ஒரு குரல், ''இராணி மங்கம்மாளே, காப்பாற்று'' என்றும் ஒலித்ததாகவும் மங்கம்மாள் உணர்ந்தாள்.

இக்கனவு இராணி மங்கம்மாளிடம் பெரும் வியப்பை ஏற்படுத்தியது; இத்தகைய ஒரு கனவை அவள் இதற்கு முன் கண்டதே இல்லை.

காலையில் கண்ட கனவாதலால் இதில் உண்மையிருக்குமென அவள் நம்பினாள்; கொஞ்ச நாட்களுக்கு முன் கொள்ளிடத்தில் வெள்ளப் பெருக்கேற்பட்டதும், அதனால் குடிகளுக்கும் பயிர்களுக்கும் மிகுந்த சேதங்கள் ஏற்பட்டமையும் இப்போதுதான் அவள் நினைவுக்கு வந்தன.

“ஆம், இவ்வெள்ளப் பெருக்கில் ஏதேனும் கோயில் அழிக்கப்பட்டு அதிலிருந்த விக்கிரகங்கள் எங்கேனும் ஒதுங்கிக் கிடக்கலாம். அதிலிருந்தே இக்கனவு தனக்குத் தோன்றியிருக்க வேண்டும்” என அவள் ஊகித்துக் கொண்டாள்.

தனது தளவாயையும் பிறரையும் கலந்து ஆலோசித்து விட்டு அத்தகைய விக்கிரகங்கள் கொள்ளிடக் கரையில் எங்கேனும் கிடக்கின்றனவா என்று பார்த்து வரப் பணியாளர்களை அனுப்பி வைத்தாள்.

பணியாளர்கள் விக்கிரகங்களைத் தேடும் முயற்சியில் மும்மரமாக ஈடுபட்டிருந்தனர். ஊர் ஊராக, மூலை முடுக்குகளிலெல்லாம் துருவித் தேடினர். இறுதியாக அவர்கள் கொள்ளிடக் கரையிலுள்ள மீனவர் வாழும் கிராமம் ஒன்றின் மேட்டுப் பகுதியில் இரு விக்கிரகங்கள் உள்ளன என்பதை அறிந்து அங்கு சென்றனர்.

ஆம், பணியாளர்கள் கேள்விப்பட்டவாறே அவ் விக்கிரகங்கள் அங்கிருப்பதை அவர்கள் கண்டு களிப்பு மிகுதியும் கொண்டார்கள்; ஓடோடியும் வந்து இராணியிடம் இச்செய்தியையும் அறிவித்தனர்!

இச்செய்தியைக் கேட்ட இராணி மங்கம்மாளின் மனக் களிப்பை எவ்வாறு வெளியிட இயலும்? இறைவன் தன்மீது கருணை கொண்டு காட்சியளித்ததை உன்னியுண்ணி அவள் பேரானந்த நிலை பெற்றாள். உடனே சென்று அவ்விக்கிரகங்களைக் கண்டு, தெரிசிக்க அவாக் கொண்டாள்; அங்கு செல்வதற்குரிய பயணத்தையும் மேற்கொண்டாள்.

பணியாளர்கள் தெரிவித்தபடியே இராணி, மீனவர் குடியிருப்புக்கருகே அம்மேட்டுப் பகுதியில் விக்கிரகங்கள்

இருப்பதைக் கண்டு, அவற்றுக்கு அஞ்சலி செய்து உள்ளம் நெகிழ்ந்து நின்ருள்.

அரசியின் கட்டளைப்படி அங்கே அவ்விக்கிரகங்களுக்கு ஆலயம் அமைப்பதற்குரிய பணிகள் தொடக்கமாயின; சிறந்த சிற்பிகளும் கட்டிடப் பணியாளர்களும் கொள்ளிடக் கரையில் இவ்வாலயத்தை அழகுறக் கட்டி முடித்தனர்.



